# தமிழ் நாட்டு
# இஸ்லாமியப் புலவர்கள்





பனைக்குளம்
மு. அப்துல் மஜீது

விற்பனை உரிமை :
அன்பு நூல் நிலையம்
18, ராமசாமித் தெரு,
சென்னை—1.

 [விலை ரூ. 1-80

முதற் பதிப்பு—1960

## பாராட்டுக்கள்

இந்நூலில் கண்ட புலவர்களின் வரலாறுகளைப் பல்லாண்டு முன்னிருந்து எனக்கு நேரிலும் அஞ்சல் அகத்தும் வேறு பல வகைத்தும் உதவியளித்த உயர்திருவாளர்கள் :

எம். கே. அப்துல் காதிறு இராவுத்தர்,
மதுரைத் தமிழ்ச் சங்கப் புலவர், சோதுகுடி.

அ. ந. பு. ஹமீதுக் களஞ்சியம் அபுபக்கர் நயினூர்ப் புலவர் குமாரர், பனைக்குளம்.

ச. தம்பிப் பிள்ளை தமிழ் வித்வான்
சுன்னுகம், யாழ்ப்பாணம்.

ஆ. கார்மேகக் கோனூர் வித்வான்,
(முன்னுள்) தமிழ்ப்பேராசிரியர்
அமரிக்கன் கல்லூரி, மதுரை.

சுலைமான் லெப்பை புலவர், கொழும்பு.

தே. தேவப் பிரியம், தமிழ்ப் புலவர், ஆசிரியர்,
சி.எம்.எஸ். உயர் நிலைப் பள்ளி, ஸ்ரீவில்லிபுத்தூர்.

சே. மூ. அ. அப்துல் ஹமீதுகான், அழகங்குளம்.

வ. ம. கி. ஜமால் முகம்மது, பனைக்குளம்.

மா. அ. பிச்சை முத்து, கீரம்பாண்டி.

உ. முகம்மதலியார், கொழும்பு, உள்நாடு.

ஆகியவர்களுக்கும்

இந்நூலைப் பொறுப்பேற்றுப் பதிப்பித்து உதவிய சென்னை நண்பர் எஸ். அப்துர் ரஹிம் அவர்களுக்கும் எனது நன்றி கலந்த பாராட்டுக்கள் உரியனவாகுக.

ஆசிரியன்

கேசரி பிரிண்டிங் ஒர்க்ஸ், சென்னை—1.

# முன்னுரை

சந்தனப் பொதியச் செந்தமிழ் முனிவனும்
சவுந்தர பாண்டிய னெனும் தமிழ் நாடனும்
சங்கப் புலவரும் தழைத்தினி திருக்கும்
மங்கலப் பாண்டிவள நாட்டில்

பொதிகையில் பிறந்து வைகையில் தவழ்ந்த தமிழ் வாழ் உலகின் ஆதிச் சமயங்களாகச் சைவமும் வைணவமும் தோன்றலாயின.

ஆண்டு நாயன்மார்கள் வளர்த்த நற்றமிழும் ஆழ்வார்கள் வளர்த்த பைந்தமிழும் வளம் கொழித்து முகடு முட்டியகாலை சமண முனிவர்கள் தோன்றிச் செந்தமிழ் வளர்த்தார்கள். இவற்றில் சமணப் பெரியார்கள் தமிழுக் காற்றிய திருப்பணியினைச் செயற்கரிய செயல் என்றே கூறலாம்.

பின் பௌத்தப் பெரியார்கள் தமிழ் வளர்க்க முன் வந்த காலத்திலே தமிழ் மலை விளக்குப் போன்று எண் திசைகளிலும் எழில் பிறங்கத் தலைப்பட்டது. அப்பால் மேலை நாட்டினரான கிறித்தவர்கள் தமிழகத்தில் அடி எடுத்து வைத்தபோது அவர்களையும் தமிழ் தன் காந்தப் பிடிப்பால் பிடித்துக்கொண்டதை அறிகின்றோம். சமயத் தொண்டராகப் பணிபுரிய வந்த வெள்ளையர் ஒருவர் தமிழ்த் தொண்டராக மாறிவிட்டது இதற்குப் போதிய சான்றாகக் கூடும்.

இங்ஙனமே தமிழகத்தில் வாழ்ந்த பல்வேறு சமயத்தினரும் தமிழ் வளர்த்துத் தத்தம் சமய நெறிகளைத் தமிழ்த் தேனில் குழைத்து இலக்கிய மாளிகை எழுப்புகிறபோது கிறித்தவர்களுக்கு அடுத்தாற் போல் தமிழகத்தில் காலூன்

இந்நூலில் காணப்படும் புலவர்களின் வரலாறுகள் அனைத்தும், சென்னையில் முகிழ்த்துத் தமிழகத்து முஸ்லிம் களுக்குக் கலைப் பணி புரிந்து வரூஉம் " முஸ்லிம் முரசு " திங்கள் வெளியீடுகளில் வெளி வந்தனவேயாகும். இவ்வாறு செய்தித்தாள்களில் வெளி வரூஉம் விளக்கங்கள் எல்லாம் தனித் தனி இடம் பெற்றுள்ளன வாதலால், இவை ஆராய்ச்சிக்காரருக்குச் சில கிடைத்தும் சில கிடைக்காம லும் போவது உண்டு. மேலும் செய்தித்தாள் விளக்கங்கள் நல்ல கட்டுக் கோப்பு இல்லாது வெகுவில் சிதைவுக்குள்ளாவதும் உண்டு.

இந்நிலைமை. கருதியே இவ் விளக்கம் பெற்ற கட்டுரைகளை ஒரு சிறு நூலாகத் தொகுத்து வெளியிடுதல் சாலச் சிறந்ததெனப் பெரிதும் கருதினர் எமதன்பர் மு. நெ. மு. யூசுபு.

ஆகவே இம் முயற்சியில் என்னைப் பெரிதும் ஊக்குவித்தவரும் நிறைய தமிழ்ப் பற்றுடையவரும், தன் வாழ்க்கையின் அரிய காலங்களைப் பொதுவாழ்வில் புகுத்தி உருவான பல நலன்களைச்செய்து இஸ்லாமியப் பண்புகள் வளம் பெறும் நோக்கில் முன்னின்று உழைப்பவருமான பினங்கு தாஹூது ரெஸ்ட்டுரண்டு உரிமையாளர்களில் ஒருவர்; இராம நாதபுரம் மாவட்டம் கீழைக்கரை உயர்திரு மு.நெ.மு. யூசுபு அவர்கள் இந்நூலை உருவாக்கவும் அச்சிலேற்றவும் உதவி நல்கினராதலால் அன்னார்க்கு எனது உளம் கனிந்த நன்றி உரியதாகும்.

பனைக்குளம்
24-11-59

பனைக்குளம்,
மு. அப்துல் மஜீது.

# உள்ளுறைந்தவை

இந்நூல் உருவாகவும், பின்னது அச்சுவாகன மேறி உலா வரவும் முற்றிலும் உதவியளித்தவரைப் பற்றிய பாராட்டுப் பாக்கள்.

(வெண்பா)

ஆழித் திரைமுழக்கும் ஆரணமோ தும்முழக்கும்
ஊழித் தமிழ் முழக்கும் ஓயாத—கீழைக்
கரைவாழும் செல்வன் கவிஞர்கள் தோழன்
உறவோன் முகம்மதீ சுப்பு.

சென்னை "முரசில்" சிறப்பாய்யான் தீட்டிய
முன்னை இசுலாம் முதுபுலவர்—மன்னுகதை
நூலாகச் செய்ய நுவன்றுன் எனைமுன்னே
மேலான் தகையான் விழைந்து.

தமிழ்நாட் டிசுலாம் தமிழ்ப்புலவர் தம்நூல்
நமரினிது பார்க்கநான் ஆக்கத்—தமதினிய
நல்லுதவி யீந்து நயமுடனே அச்சிட்டான்
பல்லுதவி யீந்தான் பரிந்து.

பனைக்குளம், மு. அப்துல் மஜீது

# 1. இரு பெரும் புலவர்கள்

## அற்புத மனிதர் அப்துல்காதர் புலவர்
## அவர் அத்தான் நயினுர் முகம்மதுப் புலவர்.

புலமை என்பது அழிவற்றதோர் உயிர் பெற்ற கலே. அது ஆய்ந்தோர் உள்ளத்தில் உந்தி எழும் உணர்வுக் கடலின் அலே. உணர்வு சிந்தனே உள்ளத்தில் கருத்துத் தேன் பிலிற்றும் மேகத்தை ஒத்தது. இவ்வாறு உணர்வு மேகம் சிந்தனேக் காற்றிேேடு கலப்புக் கொள்கிற போது உள்ளக் கடலிலே கருத்து உருப் பெறும் அலேகள் உந்தி எழுவதைக் காணலாம். இது காரணமாகத்தான் கருத்து உருப்பெறும் புலமைத் தன்மை உணர்வு இன்றிக் கிடப்பவர் மாட்டு இடம் பெறுவது கிடையா.

படிக்கிறவர் எல்லாரும் புலமையை விரும்பி நிற்பது இயல்பு. புலமையோ படிக்கிறவர் எல்லாரிடமும் இடம் பெற்றிருப்பது அரிது. இதன் உண்மைகளே இக்காலத்துக் கழகங்களில் கல்வி பயில்வோரிடத்தும் நன்கு காணலாம். பன்னெடுங்காலமாகப் பல்கலேக் கழகத்தில் பயின்றும் பயன் பெருது போனவர் எத்தனேயோ பேர்கள் இருக்கின்றனர். பல்கலேக் கழகம் என்ருல் எப்படி இருக்கும் என்று கேட் போர் பலர் புலமைத் தன்மையில் உலகத்தைத் தட்டி எழுப்பியுள்ளதைப் பார்க்கின்ருேம்.

இத்தகையோர்களேச் சரித்திர முகத்தால் எடுத்தாளப் புகும்போது அவர்கள் எண்ணிக்கை மல்கிக் கொண்டே

போகும். இவர்களைத்தாம் இயற்கைப் புலவர்கள் என்று கூறுவர் அறிஞர். இந்த இயற்கைப் புலவர்கள் உள்ளம் வறட்சி காணுத கலை ஊற்ருகவே அமைந்து விடுகிறது. இத்துடன் இவர்கள் சொல்லிலும் அயராத உயிர்த்துடிப்புக்கள் இருக்கக் காண்கின்ருேம். இது காரணமாகத்தான் இவர்கள் சொற்கள் நல்லனவையும் அல்லனவையும் நல்கி விடுகின்றன.

போர் மறவன் பலதிறப்பட்ட படைக் கலங்களையும் தாங்கி நிற்கின்ருன். இயற்கைப் புலவர் உள்ளமும் பல திறத்துப் படைக்கலங்களைத் தாங்கி நிற்கிறது. வில்லும், வேலும் அம்புக் கூடும் போர் மறவன் படைக்கலங்களாகும். சொல்லும், பொருளும் செந்நாவும் புலவர்கள் படைக்கலங்களாகின்றன. எனினும் இவ்விரு திறத்துப் படைக்கலங்களிலும் மாறுதல் இருக்கக் காண்கின்ருேம்.

அது, விற்போர் வீரன் தன் படைக்கலங்களைப் பயன்படுத்துகிறபோது குறி தவறி விடுகிறதும், எதிரி வலியானுய் இருப்பின் ஆற்ருது தோல்வியுறுகிறதுமே. இத்தகைய மாறுதலைச் சொற்போர் புலவர்களிடம் காண வியலா. அவர்கள் எங்கே தமது சொல்லம்புகளை எய்துகின்றனரோ, அவை குறி தவறுவது கிடையா. இதுமட்டுமன்று; அவை கூறுபடுத்திய புண்களை மருந்து கொண்டு குணப்படுத்தி விடவும் இயலான். பட்டது பட்டதுதான்.

போர் மறவன் படைக்கலங்கள் நாட்டைக் காக்க உதவுவன போலப் பிறனது நாட்டைக் கவரவும் உதவுகின்றன. புலவர்கள் படைக்கலங்கள் நாட்டை நலம் படுத்த உதவுவனக் கண்கூடு. இதில் எவன் நலத்தைச் சிதைக்க முற்படுகிருனே அவன் நெஞ்சிலே நஞ்சாக மாறிவிடுகின்றன புலவர்கள் பாய்ச்சும் சொற்பகழிகள்.

மயிலின் கவர்ச்சியால் அதை எல்லாரும் விரும்பி நிற்கின்றனர். இன்னும் அது தன் தோகையை விரித்து ஆடுகிறது பார்ப்பவர்களுக்கு மனக்களிப்பை ஊட்டுவதாய் இருக்கிறது. பாம்பும் ஆடும் உயிர்களில் ஒன்றுதான். எனினும் அது பார்வைக்குப் பயங்கரத்தை உண்டாக்குகிறது. அதன் பல்லிலே நச்சு இருப்பதால் மக்கள் அதை வெறுக்கின்றனர். இதனுல் மயிலே உவந்து வளர்க்க விழைகின்ற மக்கள் பாம்பை வெறுத்துக் கொல்ல முயல்கின்றனர்.

இங்குப் புலவர்களின் படைக்கலங்களும் இவைகளேயே ஒத்திருக்கின்றன. அவர்கள் நல்லவர்களே மயிலேயக் கருதி வாழ்த்தி வளம் படுத்தி விடுகிருர்கள். தீயவர்களேப் பாம்பனேயக் கருதி வெறுத்து வீழ்த்தி விடுகிருர்கள். இங்ஙனம் இவர்கள் வாழ்த்துவதிலும் வீழ்த்துவதிலும் நியாயம் இருக்கிறதென்பதை யாரேனும் மறுப்பா ரல்லர்.

இத்தகைய புலவர்களின் படைக்கலங்களால் செம்மைப் படுத்தப்பட்ட நாடுதான் நம் தமிழ் நாடு. ஆண்டுத் திரு நிறை மன்னனும் அருள் நிறை புலவர்க்கு அடங்கி நடந்தான். நாடெங்கும் நன்மை நனி சிறந்து வளர்ந்தது. உண்மையை உடைமையாய் அணியப் பெற்றது. இத்தகைய மனவளம்தான் நெற்றிக் கண்ணேக் காட்டினுலும் குற்றம் குற்றம்தான் என்று கூறத் தமிழ்ப் புலவனேத் தட்டிக் கொடுத்தது. ஆண்டுத் தமிழகம் தமிழரால் ஆளப்பட்டது. தமிழன் பெருமையைக் காத்துத் தமிழை வளர்க்கப் பாண்டியன் நெடுஞ் செழியன் இருந்தான். சேரன் செங்குட்டுவன் இருந்தான். கோப்பெருஞ் சோழன் இருந்தான். இந்தத் தமிழர் ஆட்சிகளில் எல்லாம் செம்மைசால் புலவர்கள் நெறியாட்சிகளும் தலே நிவந்து நின்றன.

தமிழன்னை வேறுபாடும் கூறுபாடும் இல்லாதவளாய் அரியணை அமர்ந்து செங்கோ லோச்சினுள்.

இங்ஙனம் சொற்படையைச் சுமந்திருக்கின்ற புலவர்களின் இதயத்தில் வெம்மை நிலைபெற இருப்பதில்லை. அவர்கள் இதயம் ஒரு பூஞ்சோலைக்கு ஒப்பாகக் காணப்படுகிறது. பூஞ்சோலையில் தூய்மை கலந்த தண்மை குடிகொண்டிருப்பது இயல்பு. இவ்வாறே இவர்கள் இதயத்திலும் செம்மையும் தூய்மையும் விரவிய தண்மை குடிகொண்டிருக்கிறதைக் காணலாம். இது காரணமாகத்தான் அங்கு மலரப் பெறும் கருத்து மலரினது கந்தங்களை உணர்வுத் தென்றல் உறுத்துகிறபோது அவை அருள் மணம் கமழும் அதிசயம் பலவற்றை விளைத்துவிடுகின்றன. இத்தகை உயரிய எழுச்சிதான் தான் பார்த்திராத தொன்றைப் பார்த்த அளவில் பகர்கிறதும் பிறரது இதயத்தில் நெகிழ்க்கும் நினைவுகளை இழுத்துப் பிடிக்கிற காந்தமுமாகின்றன.

இப்படி இலக்கணத்திற்கு இலக்கியமாயுள்ள தமிழ்ப் புலவர்கள் இக்காலத்திலும் இல்லாமலில்லை. ஆகவே இத்தகையோரில் இரு பெரும் புலவர்களை எடுத்தியம்புவது தான் இங்கு நம் நோக்கம். இவர்களில் ஒருவர் அப்துல் காதர் புலவர்; மற்றொருவர் நயினர் முகம்மதுப் புலவர். இவ்விரு புலவர்களும் முறைமைக்கு மைத்துனரும் அத்தானுமாவர்.

இவர்கள் சீருப்புராணம் பாடிய உமறுப் புலவரின் பௌத்திரர்களாவர். இவர்கள் காலம் பதினேழாம் நூற்றுண்டின் இறுதி என்று கூறுவர் ஆராய்ச்சிக்காரர். உமறுப் புலவரின் பெண் மகவை மதுரையைச் சார்ந்த மேலூரில் மணம் முடித்துக் கொடுத்திருந்தார். அங்குத் தான் நயினர் முகம்மதுப் புலவர் பிறந்து கல்வி கற்று வந்தார். அப்துல்

காதர் புலவர் உமறுப் புலவரது மகனது மகனுவர். இவர் எட்டையாபுரத்தில் பிறந்து சில காலத்திற்குப் பின் திருநெல் வேலியில் வாழ்ந்து வந்தார்.

இவர்கள் காலத்தில் தமிழகத்தில் கல்வி பயிற்று விக்கிற உயர்நிலை அமைப்புக்களோ பல்கலைக் கழகங்களோ கிடையா. ஆனுல் தமிழ் மொழியிலே உயர்நிலை பெறுகிற திண்ணைப் பள்ளிகள் ஊர்கள் தோறும் இருந்துள்ளன. நயினுர் முகம் மதுப் புலவர் மதுரை வித்வான் மீனுட்சி சுந்தரம் பிள்ளை அவர்களிடம் தமிழ்க் கற்று இலக்கண இலக்கிய வல்லுந ராய்த் திகழ்ந்தார். அக்காலத்தில் அப்துல் காதர் புலவர் அரிச்சுவடிகூடப் படித்துக்கொள்ளவில்லை. இவர் விட்டார் சொல் கேளாது வெட்டித்தனம் பண்ணுகிருர் என்பதை அறிந்து நயினுர் முகம்மதுப் புலவர் திருநெல்வேலிக்கு வந் தார்.

நயினுர் முகம்மதுப் புலவர் திருநெல்வேலிக்கு வந்ததன் கருத்து அப்துல்காதரை மேலூருக்கேனும் அழைத்துக் கொண்டு போய்க் கல்வி பயிற்றுவிக்க வேண்டுமென்பதே. அக்காலத்திலே மேலுரிலிருந்த சில முஸ்லிம்களோடு தண்ட பாணிப் பிள்ளை, பிச்சமுத்துப் பிள்ளை, சவரிராய முதலியார் ஆகியவர்களெல்லாம் நயினுர் முகம்மதுப் புலவரிடம் தமிழ்ப் பாடம் கேட்டுக்கொள்ளும் மாணுக்கர்களாய் இருந்தனர்.

அப்துல் காதர் தன் மச்சான் அழைப்பிற்கு இணங்க வில்லை. நான் இங்கேயே தமிழ்க் கற்றுக் கொள்கிறேன் என்று வாக்குறுதியளித்து விட்டார். அதற்குமேல் நயினுர் முகம்மதுப் புலவர் அவரை வலியுறுத்தல் செய்யவில்லை. இடையில் ஆண்டுகள் ஒன்றன்பின் ஒன்ருய் ஓடிக்கொண் டிருந்தன.

இதில் காலப்போக்கு நயினர் முகம்மதுப் புலவரைப் பெரிய ஆச்சரியத்தில் ஆழ்த்திவிட்டது. அப்துல் காதர் புலவர் தமது நாற்பதாவது வயதிலே மாபெரும் கவியரசரான தோடு அவதானம் பல பண்ணவும் ஆரம்பித்து விட்டதே. அப்பொழுது நயினர் முகம்மதுப் புலவருக்கு வயது நாற்பத்தைந்துதான்.

தமது மைத்துனர் கொஞ்சு தமிழ்ப்பாக்களை மஞ்சு போல் பொழிகிருர் என்பதைக் கேள்விப்பட்ட நயினர் முகம்மதுப் புலவர் அவரை மேலூருக்கு வரும்படி ஒரு முறை அழைத்திருந்தார். அப்துல் காதர் புலவர் மச்சான் அழைப்பினை உச்சிமேற் கொண்டு புறப்பட்டுச் சென்ருர். அவர் வில்லிபுத்தூர் வழியாக மதுரையை வந்தடைந்தபோது அங்குள்ள சின்னத்தம்பி ராவுத்தர் புலவரை வரவேற்று அவருக்காக இரவு விருந்தொன்று நடத்திஞர். இதனிடையில் தான் மதுரை வந்திருக்கிற செய்தியையும் நாளைத் தங்களைச் சந்திப்பேன் என்பதையும் மேலூரிலிருக்கிற நயினர் முகம்மதுப் புலவருக்கு ஆள் மூலம் தெரிவித்தார் அப்துல் காதர் புலவர்.

அன்று அப்துல் காதர் புலவருக்கென நடத்தப்பட்ட விருந்தில் கறிவகைகள் பலப்பல செய்யப்பட்டிருந்தன. அவைகளில் பழம் கற்கண்டு கரைக்கப்பட்ட தேங்காய்ப் பால் குழம்பும் நேர்த்தியானதாய் இணைக்கப்பட்டிருந்தது. அப்துல் காதர் புலவர் தாம் விரும்பியவற்றினை உண்டு முடிக்கிற போது சின்னத்தம்பி இராவுத்தர் தேங்காய்ப்பால் குழம்பைச் சுட்டிக்காட்டி இது உங்களுக்காக நேர்த்தியாகச் செய்யப்பட்டது. இதில் சிறிது சோற்றைக் குழைத்து உண்ணுங்கள் என்று கூறிஞர்.

அதற்கு அப்துல்காதர் இது பழங்களாலும் சருக்கரையாலும் குழம்பாக்கப்பட்டிருக்கிறது. உண்டால் தெவிட்டச்

செய்யுமே என்று முகத்தைத் திருப்பியதைப் பார்த்தார் சின்னத்தம்பி இராவுத்தர். பின் யாதும் வலியுறுத்தல் செய்ய வில்லை சின்னத்தம்பி ராவுத்தர்.

நாளை மைத்துனர் அப்துல்காதர் வருகிறார் என்பது நயினார் முகம்மதுக்கு எட்டியது. அவரை வரவேற்று உபசரிப்புகள் நடத்தத் திட்டம் வகுத்துக்கொண்டிருந்த அவர், தான் வழக்கம் போல் மாந்தோப்புக்குப் போகிற வேலை வந்து குறுக்கிட்டதால் அங்குச் சென்றுவிட்டார். அவசரமாக அங்குள்ள அலுவல்களை முடித்தவர் மைத்து னர்க்கென உயர்ந்த மாம்பழம் சிலவற்றையும் பறித்துக் கொண்டு வீடு திரும்புகிற போது வெய்யவன் எரிகள் விண் ணையும் மண்ணையும் தீய்ப்பதாய் இருந்தன.

வழிநடந்த உலைவிலும் வான்கதிரின் எரியிலும் உடல் நொந்து போன அவருக்கு விடாய் ஏற்பட்டுவிட்டது. இதற் காக அவர் அங்குத் தென்படும் நீர்நிலைகளை உற்று நோக்கிய போது முதுவேனிற்கால நிலையால் நீர்நிலைகளெல்லாம் வற்றி வறண்டு போய்க் கிடந்தன. அப்பொழுது வழிநெடுகில் நிற் கிற பனைகளின்மேல் நாடார்கள் பதநீர் வடித்துக் கொண்டி ருந்தார்கள்.

வறட்சியின் அதிகரிப்பால் தொண்டை வறண்டு போன அவர் ஒரு பனையடியில் வந்து நின்று ஆகாயத்தை உற்று நோக்கினார். புலவர் இங்ஙனம் பனையடியில் நின்று கொண் டிருக்கிறதை மேலே பதநீர் வடித்துக்கொண்டிருந்த நாடார் ஒருவர் பார்த்து விட்டாராதலால் அவர் விறுவிறு வென்று கீழே இறங்கியவர் புலவரிடம், ஐயா! இந்தப் பதநீர் தேன் போல் தித்திக்கும், சிறிது வடித்துத் தருகிறேன் பருகித் தாகம் தீர்த்துக் கொள்ளுங்களேன் என்றார்.

புலவர் எப்போதேனும் பதநீர் அருந்தினவரல்லர். அன்று விடாய் அவரை இரையாக்கிக் கொண்டிருந்தும்

அவர் பதநீர் அருந்த மனமில்லாது மறுத்துவிட்டார். காரணம் இவர்கள் கள்ளையே பதநீராக மாற்றுகிறார்கள். கூர்ந்து கவனித்தால் கள்ளும் பதநீரும் அண்ணன் தம்பி போன்றனவே என்று அவர் எண்ணம் கொண்டிருந்தது தான்.

மறுநாள் மாலையில் அப்துல்காதர் புலவர் மேலூரை அடைந்து நயினார் முகம்மதுப் புலவரை அண்மினார். அங்கு ஈரிருதயங்களும் கலப்புக் கொண்டது வட கடலும் தென் கடலும் சங்கமமானது போல் இருந்தது. அப்பொழுது இவர்கள் உறவு ஒருபுறமாகவும் புலமை ஒருபுறமாகவும் காட்சி கொடுக்கத் தலைப்பட்டன. விற்போர் வீரர்கள் வேலைத் திறமையை வெளிப்படையாகக் காணலாம். சொற்போர் புலவர்கள் சொல் திறமைகளைக் காண்பதற்குக் கூர்த்த மதி வேண்டியதாய் இருந்தது அவர்கள் அருகில் இருந்தவர்களுக்கு.

அன்றிரவு உண்டி வழங்கப்பட்டது அப்துல்காதர் புலவருக்கு. அப்பொழுது உள்ளூர்வாசிகளான நயினார் முகம்மதுப் புலவருக்கு உரியவர்கள் சிலரும் அந்த உண்டியில் கலந்து கொண்டார்கள். எல்லாரும் உண்டி கொண்டு முடியும் தறுவாயில் நயினார் முகம்மதுப் புலவர் தமது மாந்தோப்பிலிருந்து கொணர்ந்த மாங்கனி சிலவற்றைக் கூட்டுக் குழம்பு செய்து அவற்றையும் எல்லோரும் உண்ணும்படி கூறினார். அப்துல்காதர் புலவர் மட்டும் அந்த மாங்கனிக் குழம்பினை உண்ணவில்லை. இதை அறிந்துகொண்ட நயினார் முகம்மதுப் புலவர் இக்கனிகள் நம் தோப்பிலுள்ள உயர்ந்த இனம். இக்கனிகளை உமக்காகவே நான் கொண்டுவந்தேன். அவைகளைப் பாலாகப் பக்குவப்படுத்தி இருக்கிறது. அதில் நீர் சிறிது உண்டு பாரும் என்று கூறினார். அப்பொழுதும் அப்துல் காதர் புலவர் அந்த மாம்பழப் பாலினை உண்ண மனமில்லாது திகைத்தவராய் மருட்சி துளும்ப மலைத்தார்.

இம்மருட்சி நிலையே அங்கு நயினர் முகம்மதுப் புலவரின் மன நிலையைப் பாடல் நயமாக வெளிப்படுத்திவிட்டது. அவர் உடனே,

''தேங்காய்ப்பால் உண்ணத் தெவிட்டும் உமக்கிங்கு
மாங்காய்ப்பால் உண்ண மலைப்பதேன்''

என்று தம் புலமைத் தன்மையில் ஒரு கேள்வியை எறிந்து விட்டார்.

இந்த அரை வெண்பாவில் அடங்கிய கருத்து நயம் கேள்வியாக அப்துல் காதர் புலவர் செவிகளில் புகுந்தது. இங்கு மச்சான் நமக்கு முதலில் வயிற்றுக்கு உண்டியளித்தவர் பின் செவிக்கு உண்டியளிக்க வந்து விட்டார் என்பதை உணர்ந்ததும் அக்கணமே அவர் அம்புக்கு அம்பாலே விடையளிப்பதுபோல ஓர் அழகான மிகப் பொருத்தமான பதிலை மறு பாடலில் பொழிந்துவிட்டார். அப்பாடல்,

—''நீங்கள்

பனைவடிக்கும் கள்ளும் பதனியும் ஒன்றென
நினைவுதனில் கொண்டதுக்கு நேர்''

என்பதே.

இதில் முதலாவதான நயினர் முகம்மதுப் புலவர் பாடலில் உமக்குத் தேங்காய்ப் பால் குழம்புதானே தெவிட்டும். இங்கு மாங்காய்ப்பால் குழம்பு உண்ண மலைப்பதேன் என்று கேட்கிற கேள்வியில் ஆச்சரியம் துளும்பக் காண்கின்றோம். எப்படி எனில், அப்துல் காதர் புலவர் மதுரை சின்னத்தம்பி இராவுத்தர் வீட்டில் விருந்துண்ணுகிறபோது அவரளித்த தேங்காய்ப்பால் குழம்பைத் தெவிட்டு மென்று கூறி உண்பதற்கு மறுத்தார். இந்நிகழ்ச்சி சின்னத்தம்பி இராவுத்தர்க்கும் அப்துல் காதர் புலவருக்குமே தெரியுமாதலால், இங்கு நயினர் முகம்மதுப் புலவருக்குத் தெரிய காரண

மேயில்லை. இந்நிலையில் அவர் அதைத் தெரிந்து கேள்வி யாகக் கேட்டுவிட்டது ஆச்சரியமானதே.

பின் அப்துல் காதர் புலவர் நயினுர் முகம்மதுப் புல வருக்கு அளித்த விடையில் நயினுர் முகம்மதுப் புலவரைப் பதனி வடிப்பவர் பருகித் தாகம் தீர்த்துக் கொள்ளுங்களேன் என்று கேட்டவிடத்தில் வேண்டாமென்று மறுத்தவர் கள் ளும் பதனியும் அண்ணன் தம்பி போன்றனவே என்று மனத் தில் நினைத்தாரே யல்லாது அதை யாரிடமும் கூறவில்லை. இங்கு அத்தகைய உள்ள உறைவயும் இவர் அறிந்து பதிலி றுத்தது ஆச்சரியத்தினும் ஆச்சரியமே! இதனுல் இவ்விரு புலவர்களும் ஒருவருக்கொருவர் காணுத தொன்றைக் கண்டு விடுகிறவர்களாகவும் உள்ளுறைவுகளை உணர்ந்து விடுகிற வர்களாகவும் இருந்துள்ளனர் என்பது புலனுகின்றது.

கருத்து: கள்ளும் பதனியும் இனத்தில் ஒரு தாய் வயிற்றில் பிறந்த இரு குழவிகள் போன்றே தேங்காய்ப் பாலும் மாங் காய்ப் பாலும் குணத்தில் ஒன்றுபட்டதென்பதே. இங்கு முதலாவதாக இவ்விரு புலவர்களும் புரிந்து கொண்ட சொற் போரிலிருந்து அவர்கள் ஒருவரை யொருவர் அறிந்து கொண் டார்களென்பது புலனுய்விட்டது.

பின் வைகலும் தம் மாந்தோப்பிற்குப் போய் வருகிறது நயினுர் முகம்மதுப் புலவரின் வேலை. அன்று வெயிலவன் மேல்கிளம்பு முன் புறப்பட எண்ணிய நயினுர் முகம்மதுப் புலவர் கூடத் தன் மைத்துனர் அப்துல் காதரையும் அழைத் துக் கொண்டு போனுர். இவர்கள் அலுவல்களை முடித்துக் கொண்டு வீடு திரும்புகிற போது போனவழியில் வராமல் வேறு வழியில் வந்தார்கள். அவ்வழியில் ஆலத்தோப் பென்னும் ஒரு எல்லைகையையும் அவர்கள் கடக்க வேண்டிய தாய் இருந்தது.

மேலூரிலே சங்கர ஐயர் என்பவர் நல்ல செல்வ வளம் உடையவர். அவர்க்கு ஆலத்தோப்பில் கனி மரத்தோட்டம் ஒன்றிருந்தது. அதிலுள்ள பலா மரம் ஒன்றில் காய்த்திருந்த பழத்தை யாரோ களவு செய்து விட்டனர். இந்நிகழ்ச்சி சங்கர ஐயருக்குத் தெரிந்து மரத்தை வந்து பார்த்துக் கொண்டிருந்தார்.

ஐயருக்கு அங்கு எதிர்ப்பாளர்கள் யாரும் இருப்பார்கள் போலும். பழத்தைக் களவாடியவர் யார் என்று தெரிவதற்கு முன் ஐயர் பேச்சில் தம் எதிரிகளைச் சுட்டிக்காட்டிப் பேசியது அங்கு அடுத்து நடந்து வருகிற நயினர் முகம்மதுப் புலவர் செவியில் பட்டது. இதனிடையில் அவ்விரு புலவர்களும் ஐயர் அருகில் வந்துவிட்டார்களாதலால், ஐயர் பாருங்கள் புலவர்களே! பழம் நன்ருக முற்றிப் பழுப்பதற்குள் அதைக் கவர்ந்து கொண்டு போய் விட்டார்கள் என்று மனம் வருந்திக் கூறினர். இவ்வார்த்தைகளைக் காதில் வாங்கிக் கொண்ட நயினர் முகம்மதுப் புலவர் களவு புரிந்தோரைக் கண்டு சொல்வது மைத்துனர் அப்துல் காதர் புலவர்வேலை என்று கருதிவிட்டார்போலும். அவர் அப்பொழுதே,

''ஆலத்தோப் புச்சங்க ரையர் பலாமரத்தில்
பாலும் பழத்தைப் பறித்ததியார்''

என்று அரை வெண்பாவில் ஒரு கேள்வியைப் போட்டார். அதற்கு அப்துல் காதர் புலவர் விடையாகத் தானும் அரை வெண்பாவிலே,

''—மேலையூர்

தட்டான் மகன்ராமன் தச்சன் மகன்லிங்கம்
செட்டி மகன்வேலும் சேர்ந்து''

என்று களவு புரிந்தோர் பெயர்களோடு அவர்கள் குலப் பெயரையும் அடுக்கடுக்காய்க் கூறிவிட்டார்.

பின் என்ன ? சிறிது நேரத்தில் அந்த மூன்று பேர்களை யும் அவர்கள் கவர்ந்துள்ள பலாப்பழத்தினோடு ஊரில் கொணர்ந்து சேர்த்துவிட்டனர் அங்கிருந்த மக்கள். இதில் காணப்படுகின்ற இராமன் லிங்கம் வேல் என்னும் மூன்று பேர்களும் பள்ளிச் சிறுவர்கள். இத்துடன் இவர்கள் ஒன்றை யொன்று தொடர்ந்த அடுத்த வீட்டுக்காரர்கள். இவர்கள் விளையாட்டுத்தனமாகவே இந்தக் களவைச் செய்துள்ள தாகத் தெரிந்தது. அப்துல் காதர் புலவர் சங்கரையரிடம் அவர்கள் பறித்த பழத்தை அவர்களிடமே கொடுத்துவிடச் செய்து இனிமேல் இத்தகைய சிறுமைச் செயல் செய்யக் கூடாதென்று அச்சிறுவர்களைக் கண்டித்து அனுப்பினர்.

அப்பால் மேலூரே ஓர் எடுப்பு எடுத்து விட்டது. அவர்கள் அப்துல் காதர் புலவரை வைத்த இடத்தில் வைக்கவில்லை. சங்கர ஐயர், புலவரை நோக்கி ஐயா! உங் களைப் பார்த்தால் பேசும் தெய்வம் போல் தோணுகிறதே என்று வியந்து கூறியவர் இவர் மகிமைகளை இன்னும் கண் டறிய வேண்டுமென்று தம் செலவிலேயே புலவரை அவதா னம் பண்ணிக்காட்டும்படி வேண்டினர்.

அப்பொழுது பதினறு விதத்தைக் கொண்ட அவதானம் பண்ணிக்காட்டுகிறதாகச் சம்மதித்தார் புலவர். அவ்விதங் களாவன. அவதான அரங்கில் புலவர் வீற்றிருப்பதன் எதிரே திரையொன்று போட்டு அதன் மறைவில் நான்கு பேர் ஒரு வகையான கவருட்டம் புரிகுவர். அவர்களில் இன்னின்னர் இன்னின்ன வகையில் வெற்றி பெற்றனர் என்பதைப் புலவர் இருந்த இடத்திலிருந்து கொண்டே கூறுதல் வேண்டும். அப்பால் புலவரைச் சுற்றிலும் நான்குபேர் ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் நாற்கவிதைகளை எழுதக்காத் திருப்பர். அவதான வரிசைகளுக்கிடையே அவர்களிடம் சொற்களாகவோ எழுத்தாகவோ சொல்லி அவதான

முடிவிலே அந்த நாற்கவிதைகளையும் நிறைவு படுத்த வேண்டும்.

இரண்டு பேர் புலவரிடம் கணக்குகள் கேட்பர். அதற்குச் சரியாய்ப் புலவர் விடை பகரவேண்டும். இரண்டு பேர் கவிதைகளுக்குப் பொருள் கேட்பர். அதற்குப் புலவர் ஒத்த பொருள் பகரவேண்டும். இரண்டுபேர் தங்கள் மனத்தில் பட்ட கேள்விகளைக் கேட்பர். அதற்குப் புலவர் தக்க விடையிறுத்தல் வேண்டும். இரண்டு பேர் ஒருவர் சிறு கல்லையும், பிறிதொருவர் நெல்லையும் அவதானப் புலவர் முதுகில் எறிவர். அவதான முடிவிலே அவர்கள் எறிந்துள்ள கல் இத்தனை நெல் இத்தனை என்பதைப் புலவர் சரியாகக் கூற வேண்டும். இஃதல்லாமல் புலவர் அவதானம் பண்ணிக் கொண்டிருக்கையில் புறக்கேள்வி என்று சிலர் தங்கள் விருப்பத்தைக் கேட்பார்கள். அக்கேள்விகளுக்கும் புலவர் விடை பகர்தல் வேண்டும்.

புலவர் அவதான பீடத்தில் அமர்ந்ததும் அவர் சமய நெறிப்படி இன்னும் அவர் விருப்பப்பட்ட மூல மந்திரங்களையோ தெய்வத் திருநாமங்களையோ வாய் வழியே அலம்பிக் கொண்டிருப்பர். இவர்களில் சில புலவர்கள் தம் கையில் ஒரு வகையான பின்னல் சங்கிலி வைத்துக் கழற்றிக் கொண்டிருப்பதுமுண்டு. அந்தச் சங்கிலி என்று கழற்றி முடிந்துவிட்டதோ அவதானத்தின் கால அளவும் முடிந்துவிட்டது என்பது கருத்து.

வேறு சில புலவர்கள் கையில் எழுத்தாணி கொண்டு கவிதைகள் எழுதிக் கொண்டிருப்பதும் வழக்கம். இதில் அவர் வரையறுத்துள்ள கவிதைகள் யாண்டு எழுதி முடிகின்றனவோ ஆண்டு அவதானமும் முடிந்துவிட்டதென்பது அதன் குறிக்கோள். அன்று அப்துல் காதர் புலவர் செய்த

அவதானத்தில் அவர் கையில் பின்னல் சங்கிலிதான் வைத்துக் கழற்றிக் கொண்டிருந்ததாகத் தெரிகிறது. அவர் தமது இஸ்லாமிய நெறிப்படி யா அல்லா(ஹ்) யா ரசூல் யா முகியத்தீன் என்ற மூல மந்திரங்களையே உச்சரித்திருக்கிருர்.

அன்று அப்துல் காதர் புலவர் செய்த அவதானம் பார்ப்பவர் கண்ணைப் பறிப்பதாய் இருந்தது. அவதான அவையில் இடம்பெற்றிருந்த மக்கள் எல்லோரும் ஏதோ ஒரு புதுமை உலகத்திலே வாழ்பவர்கள் போலக் காணப்பட்டனர். அப்பொழுது நயினுர் முகம்மதுப் புலவரின் மாணுக்கரான பிச்சை முத்துப்பிள்ளை அவதானப்புலவரிடம் கீழ்க்காணுமாறு ஒரு கேள்வியைக் கேட்டார். ஒரு வெண்பா "ஐ" என்று எடுத்துத் "தை" என்று முடித்தல் வேண்டும். அதன் உள்ளடக்கத்தில் விநாயகப் பெருமாள் பெயர் வரவேண்டும் என்பதே அந்தக் கேள்வி. இக்கேள்வியை அறிந்து கொண்ட புலவர் தாம் அவதானம் பண்ணிக்கொண்டே அதை அப்படியே பாடலில் அமைத்து விடுகிருர். அப்பாடல்,

"ஐயா விரிசடையோன் அண்ணலுக்கு முன்னுதித்த
மெய்யாங் குஞ்சரப வித்தகனும்—வையமெல்லாம்
போதமுறும் வேழமுகப் புண்ணியனைப் போற்றுதற்குச்
சாதனைசெய் பால்சாதத் தை"

என்பதே.

பின் அவ்வூர் பட்டாமணியம் மாணிக்கம் பிள்ளை குமாரர் பெருமாள் என்பவர் அவதான அவைக்குக் காணிக்கையாகப் பலாப்பழம் ஒன்று கொண்டு வந்தவர், இப்பழத்தினுள் எத்தனை சுளைகளிருக்கின்றன என்பதை அவதானப் புலவர் பாடலாகக் கூறவேண்டுமென்று கேட்டார். அதற்கு உள்ளிருக்கும் சுளை இத்தனைதான் என்று வெளியிலிருந்து கொண்டே பாடுகிருர் புலவர். அது,

"மாணிக்கம் பிள்ளை மகனும் பெருமாள்தம்
காணிக்கை யாயிங் களித்திட்ட—பாணிக்கைத்

தின்னத் தெவிட்டாத தேனுர் பலாப்பழத்தில்
தொண்ணூற்றி யாறு சுளை''

என்பதே.

இத்துடன் அவதானம் எட்டுணை இடுக்கணுமின்றி வெற்றிமேல் வெற்றியாக முடிவடைந்தது. பெருமாள் கொணர்ந்த பலாப்பழத்தில் தொண்ணூற்று ஆறு சுளைகள் சரியாய் இருந்தன கண்டு அங்கிருந்தவர் யாவரும் வியப்புற்றுப் போயினர்.

இத்தகைக் காட்சி இன்பம் பருகி மாட்சியுற்றுப்போன நயினுர் முகம்மதுப் புலவர் தம் மைத்துனர் அவதானப் புலவரை அவதான பீடத்திலிருந்தவாறு மார்போடு தழுவியவர், அவர்மீது பாராட்டாகக் கீழ்க்காணும் பாடல் ஒன்றினைப் பாடினுர். அது,

''அரிய தமிழ்ப்புலவர் அப்துல்கா தர்செய் அவதா னத்தைத்
தெரிய எனக்குள்ள இருகண்ணும் போதலைச் செப்புதற்கும்
உரிய மனவறிவு மில்லையவர் பெருமை உரைப்பதற்குப்
பெரிய தமிழ்ப்புலவர் களேயாவர் நானென்ன பேசுவதே''

என்பதாம். பின், அன்று அவதான அவைக்கு விரும்பி அழைக்கப்பட்டிருந்த மேலூர் நயினுர் முகம்மதுப் புலவரின் தமிழாசிரியர் மதுரை வித்வான் மீனுட்சி சுந்தரம் பிள்ளை அவதானப் புலவரைப் பாராட்டிப் பாடியதும் இதன் கீழ்த் தரப்படுகிறது காண்க.

''அண்டரும் பார்த்ததி சயிக்க வல்லஅவ தானத்தை
மண்டலத்தில் செய்து மாண்பளித் தான்நம் மனமகிழத்
தண்டமிழ்.வேந்தனப் துல்காதர் வித்துவத் தன்மையினைக்
கண்டால் குறுமுனி யும்சபா சென்று கழறுவனே''

என்பதாம்.

இந்த அப்துல் காதர் புலவர் நபிகள் பெருமான் (ஸல்) அவர்கள் தியாக வாழ்க்கை கூறுமுகத்தான் மதினத்து அந்தாதி என்னும் அரியதொரு செந்தமிழ் இலக்கியத்தை இயற்றியுள்ளார். இத்தகை அருள் வடிவான இஸ்லாமியத் தமிழ்ப் புலவர்கள் பலர் அக்காலத்தில் இருந்துள்ளனர் என்பதைச் சரித்திரம் இயம்புகிறது. இத்தகைப் பெரும்புலவர்கள் இயற்றிய பல இஸ்லாமிய இலக்கியங்களெல்லாம் இக்காலத்தில் எங்கிருக்கின்றன என்பதைத் தேடி எடுப்பது அரிதாய் இருக்கிறது.

ஆகவே இதுவரை நாம் கருத்தில் உவந்து கழிபேருவகை பூத்த முஸ்லிம் தமிழ்ப் புலவர்களை எழுப்பித் தந்த நந்தமிழ்நாடு மீட்டும் யாண்டு அத்தகையோரை எழுப்பித் தரலைப் பார்க்க அவாவுறுகின்றேம்.

——: o :——

# 2. அமரகவி சவ்வாதுப் புலவர்

இராமநாதபுரத்தை அரசு புரிந்த சேதுபதி மன்னர்களில் இரகுநாத சேதுபதியும் ஒருவர். இவர் பெயரை உடைய சேதுபதிகள் பலர் இருந்திருக்கிறுர்களாயினும் இவரைப் பற்றிப் பாட எடுத்துக் கொண்ட புலவர்கள் காலத்தை ஒப்பிட்டுப் பார்க்கிறபோது இவர் காலம் பதினுரும் நூற்ருண்டின் ஆரம்ப மெனத் தெரிய வருகிறது.

இவர் தமிழ் வளர்க்கும் துறையில் புலவர் பெருமக்களுக்கு நல்லாதரவு நல்கிஞராதலால் இவர் பெயரால் பல செந்தமிழ் இலக்கியங்கள் உருப்பெற நேர்ந்தன. அவைகளில் பொன்னுங்கால் அமிர்த கவிராயர் இயற்றிய அகத்துறையுடைய " நாணிக் கண் புதைத்தல் " என்னும் ஒருதுறைக் கோவையும் குறிப்புக்குடைய நூலாகும்.

சேதுபதி வழித்தோன்றல்கள் செந்தமிழ் வளர்த்தார்கள் என்று கூறுவது அவர்கள் தமிழ்ப் புலவர்களே ஆதரித்து வந்ததைமட்டும் குறிப்பிடமாட்டாது. பொதுவாகச் சேதுபதி பரம்பரையே தமிழை நன்கு கற்றுப் புலமை பெற்றிருந்ததும் காரணமாகும். கற்றவர்கள் பெற்றியைக் கற்றவர்கள்தாம் மதிப்பிட முடியும் என்ற நியதிப்படி தண்டமிழ் அறிந்த பண்டிதர் எவர்க்கும் சேதுபதிகள் ஆதரவளித்ததே முப்பெருங் கோக்களுக்குப் பின் செந்தமிழ் வளர்த்தது சேதுபதிகள் என்ற புகழை நிலே நாட்டியது. இங்ஙனம் நிலே நாட்டப் பெற்ற புகழின் பெரும்பங்கு இந்த இரகுநாத சேதுபதியையே சாரும் என்பதற்கு இங்கு,

" மூவேந்தரும் அற்றுச் சங்கமும் போய்ப்பதின் மூன்ருேடெட்டுக் கோவேந்தரும் அற்று மற்ருெரு வேந்தன் கொடையும் அற்றுப்

**பாவேந்தர் காற்றில் இலவம் பஞ்சாகப் பறக்கையிலே**
**தேவேந்த்ர தாருஒத் தாய்ரகு நாத செயதுங்கனே"**

என வரூஉம் படிக்காசுப் புலவர் பாடல் சான்ருகக்கூடும்.

இந்த இரகுநாத சேதுபதி கி. பி. 1647-ஆம் ஆண்டு முதல் 1672-ஆம் ஆண்டுவரை இராமநாதபுரத்திலிருந்து அரசு புரிந்திருக்கிருர். இவர்க்கு, திருமலேச் சேதுபதி, தள வாய் இரகுநாத சேதுபதி, கிழவன் சேதுபதி என்ற பெயர்கள் வழங்கிவந்தன. இவற்றில் முதற்கண் காண்பதும் நடுவண் காண்பதுமான இரு பெயர்களும் குலப் பெயராக வழங்கப் பட்டன. இறுதியில் காணும் கிழவன் சேதுபதி என்னும் பேர் இவர் சமயங்களில் கிழவராக வேடம் பூண்டு பலரை யும் மருட்டிவிட்டதன் காரணமாய் வந்ததாய்த் தெரிகிறது.

இவர் ஆத்தான மன்றத்தில் அமிர்த கவிராயர் தலே யாய, புலவர் பெருமக்கள் பலர் இடம் பெற்றிருந்தனர். இவர் களுள் சவ்வாதுப் புலவர், சர்க்கரைப் புலவர் என்னும் இரு இஸ்லாமியப் புலவர்களும் இடம் பெற்றிருந்தனர்.

இந்தப் புலவர்கள் யாவரும் செந்தமிழ்க் குரிசில்களாக வும் கவிப்பெருங் கடல்களாகவும் காட்சியளித்தார்களாத லால், இரகுநாத வேந்தரின் புகழைத் தமிழ்த்தேனில் குழைத்துக் கவிதை மண்டபம் பல எழுப்பியுள்ளார்கள். இவர்கள் பாடியுள்ள பிரபந்தங்களும் தனிப்பாடல்களும் தமிழறிவு பெறும் ஒவ்வொருவர்க்கும் உணவு போன்று அமைந்துள்ளன.

இவர்களில் அமிர்த கவிராயர் எவ்வாறு அருட்பிழம் பாக இருந்தாரோ அவ்வாறே சவ்வாதுப் புலவரும் தனக்கு நிகர் தாளுகவே காணப்பட்டார். இதனுல்தான் அமிர்த- கவிராயர் காலத்திற்குப்பின் சவ்வாதுப் புலவர் அரசாங்கத் தலைமைப் பீடத்தை வகிக்கலானுர். அப்பொழுது சவ்வாதுப்

புலவரிடம் காணப்பட்ட அரசியல் நுண்மதியையும் வினைத் திட்பத்தையும் பாராட்டிய இரகுநாத செம்மல் அவரைத் தமது அரசாங்கச் செயலாளராக ஆக்கிக்கொண்டார். அன்றிருந்து அரசாங்கக் காரியங்கள் யாவும் சவ்வாதுப் புலவர் பொறுப்பிலேயே இருந்துவந்தன.

இதன் விளைவுகள் மற்றப் புலவர்களுக்குள் பொறாமையும் பூசலையும் வளர்த்துக்கொண்டு போயின. அரசர் தமது பொறுப்பு அனைத்தையும் சவ்வாதிடமே ஒப்புவித்து விட்டாரே என்பதுதான் அது. இவ்வாறு நாளுக்கு நாள் புகைந்து கொண்டிருக்கும் பூசலை உணர்ந்துகொண்ட அரசர் அப் புலவர்கள் இன்னும் சவ்வாதின் மகிமையை அறிந்து கொள்ளவில்லை. ஆகவேதான் இவர்களுக்குள் அழுக்காறு அடைகிடக்கக் காண்கின்றோம் என்றெண்ணியவர் இருக்கட்டும் காலப்போக்கில்தான் இவர்களுக்குச் சீலம் புகட்ட வேண்டுமென்று சூழ்நிலையை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்.

இரகுநாதர் மனத்தில் என்ன தோன்றியதோ தெரியவில்லை. ஒரு நாள் அவர் இரவு வேளையில் ஒருவர்க்கும் தெரியாமல் கிழவர் வேடம் தாங்கி நகர் சுற்றிக் கொண்டிருந்தார். அப்பொழுது தெற்குப் பட்டணம் வடகோடிப் பகுதியின் ஒரு வீட்டில் நடந்துள்ள திருக்காட்சி புதுமை பார்க்கச் சென்ற கிழவரை அதிசயம் தோன்றி வரவேற்றது போல் இருந்தது. இற்றைக்கும் நம் நாட்டில் கட்டப்படுகிற வீடுகள் சில நிலைக்கு வெளியே வாசல் கூடம் போட்டு நடுவில் பாதை அமைத்திருக்கிறதைப் பார்க்கலாம்.

இப்படி அமைப்புள்ள வீடு ஒன்றில் குடி இருக்கிற இளம் பெண் ஒருத்திக்கும் அவள் தாய்க்கும் நடந்துகொண்டிருக்கிற வாக்கு வாதங்கள் அங்குக் கிழவர்க்குரிய சுவை

விருந்தாய் இருந்தன. குறிப்பிட்ட வீட்டில் பாதிக் கதவு திறக்கப்பட்டிருக்கையில் அதன் நிலைப்படியிலே ஒரு காலை ஊன்றிக்கொண்டு நின்ற தாய், தெரு வழியை நோக்கியும் சாத்தப்பட்டிருக்கும் பாதிக் கதவினுட்புறம் நோக்கியும் பேச்சு வார்த்தை நடத்தியது அங்கு இருளில் மறைந்து நின்ற கிழவர் காதில் விழுவதாய் இருந்தது.

தாய் தன் மகளை நோக்கி, "அவர் நல்ல மனிதர், பணக்காரர். உன் மீது மோகம் கொண்டு மயங்கிப் போய் விட்டார். இப்படி மனிதரை நாம் தெரிந்திருப்பது நமக்குப் பெரிய உதவியைத் தெரிந்திருப்பது போலாகும். அவர் பல முறை உன்னைப்பற்றி என்னிடம் வினவி இருக்கிறார். அவர் விருப்பத்திற்கு நானும் சரியென்று வாக்குக் கொடுத்து விட்டேன். இதோ! அவர் உனக்காக வாங்கிக் கொடுத்த உயர்வான சேலையும், தைக்கப்பட்டுள்ள கச்சும் இந்த முடிச்சினுள் இருக்கின்றன. நீ இப்போதே அவைகளை அணிந்துகொள். அவரை இராத்திரிக்கு வீட்டிற்கு வரும் படி சொல்லியிருக்கிறேன். அவரிடம் நீ சற்றுப் பிரியமாய் நடந்துகொள்" என்று கூறினாள்.

மகள் நீ என்னம்மா சுத்தப் பைத்தியம் போல உளறு கிறாய்! பணக்காரராகவோ நல்லவராகவோ இருந்தால் நமக்கென்ன? நீ என்னை ஒருவருக்கு மணம் செய்து கொடுத்தபின் இன்னொருவரிடம் அடகுவைக்கத் துணி கிறாயே! இதை யாராவது வெளி மனிதர்கள் அறிந்தால் என்ன நினைப்பார்கள். போ போ, உன் பேச்சை என் காதில் போடாமல் என்று வெடு வெடுத்தவளாய் எதிர் பேசிக் கொண்டிருந்தாள்.

தாய் உன்னை ஒருவர்க்கு மணம் செய்து கொடுத்தது உண்மைதான். இப்பொழுது உன் கணவர் உள்ளூரிலா

இருக்கிருர். அவர் அயலிடத்திற்குச் சென்ற நேரம்தானே! இப்பொழுது இங்கே நடக்கிறதை அவர் பார்த்துக்கொண்டா இருக்கிருர். உன் அழகுப் பொலிவிலே உள்ளத்தைப் பறி கொடுத்து விட்ட அவரோடு சிறிது நேரம் அன்பாய் நடந்து கொள்வதில் என்ன கெட்டுப் போகிறது? நீ என் சொல்லைத் தட்டாமல் நடந்துகொண்டால் நாம் எவ்வளவோ முன்னுக்கு வந்து விடலாம். நாமட்டு மென்ன? உலகத்தில் இப்படி யெல்லாம் நடந்து கொள்கிறது வழக்கம்தானே! நான் அவருக்கு வாக்குக் கொடுத்து விட்டேன். அதற்காகத்தான் நான் உன்னை வேண்ட வேண்டியதாகிறது என்று மகளைக் கள்ளம் புரியும்படி கட்டாயப் படுத்திக் கொண்டிருந்தாள்.

இத்தனை வார்த்தைகளையும் காதில் வாங்கிக் கொண்ட கிழவர் ஏதும் அறியாதவர் போல 'அம்மா' என்ருெரு குரலை அம்பு எய்வது போல எய்தி விட்டார். தாய் திடுக்கிட்டுப் போனவளாய் இருட்டில் நிற்கிற கிழவரைப் பார்த்து நீ யாரப்பா என்று வினவினுள். கிழவர், அம்மா! நான் இராமேஸ்வரம் போகிற யாத்ரீகன். வெகு தூரத்திலிருந்து வந்திருக்கிறேன். இன்று இராத்திரிக்கு உங்கள் வீட்டுத் திண்ணையில் படுத்திருந்துவிட்டுக் காலையில் போய் விடுகிறேன் என்று கேட்டார்.

அவ்வளவுதான். கிழவர் வார்த்தை தாய்க்காரியின் செவியில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்றியது போல் இருந்தது. அவள் இது என்ன சனியன். பூசை வேளையில் கரடி குறுக்கிடுகிறது என்று மூளை கிறுகிறுத்துப் போனவள், பெரியவரே! இங்குக் குடியானவுங்க வீட்டிலே அசல் மனுஷர்க தங்கக்கூடா தென்பது சேதுபதி மகராசா உத்தரவு. யாத்ரீகர்க தங்குவதற்குச் சத்திரங்க சாவடிக இருக்குதுங்க. நீங்க அங்கே போயித் தங்கிக் கொள்ளுங்க என்று வெடுவெடுப் போடு பதில் கூறினுள். அதற்குக் கிழவர் நல்லதம்மா என்று

கூறிக் கொண்டே அவ்வீட்டை விட்டு அகலப் போவது போல் காட்டிக் கொண்டவர் ஒருவர்க்கும் தெரியாமல் இருளில் வந்து மறைந்து கொண்டார்.

அப்பால் வாசல் வழியிலே யாரும் நடமாடுகிருர்களா வென்று சுற்று முற்றும் பார்த்தாள் தாய். அவள் கண்ணிற்கு ஒருவரும் தென்படவில்லை. பின் மெல்லெனத் தன் மகளை அணுகி அவர் வாங்கிக் கொடுத்த சேலையும் இரவிக்கையும் இதனுள் இருக்கின்றன. அவைகளை இப்போது அணிந்து கொள் என்று முடிச்சை எடுத்து நீட்டினுள்.

அப்பொழுது தாயின் இழிநிலைப் பேச்சில் வெகுண்டு போய் இருந்த மகள் அந்த முடிச்சை என்னிடம் நீட்டாதே என்று தன் கையால் தட்டிவிட்டாளாதலால், கீழே விழுந்த முடிச்சு அதிர்ந்து வெளிநடையில் வந்து பாய்ந்தது. இதையறியாத தாய் எது காரணமாகவோ திடுதிடுவென்று உள் வீட்டிலே சென்று விட்டாள். விளக்கு வெளிச்சமில்லாது எங்கும் இருண்டு போய் இருந்ததால் முடிச்சு வெளிநடையில் பாய்ந்ததை வெகுண்டு போய் இருந்த மகளாலும் அறிய முடியவில்லை. இத்தகைய நிகழ்ச்சியிலே முழுவதும் தன் கவனத்தைச் செலுத்திக் கொண்டு நின்ற கிழவர் இப்படிச் சமயம் வாய்க்குமா என்றெண்ணியவர் முடிச்சைத் தன் விக்கத்தில் இடுக்கிக் கொண்டு விறுவிறுப் போடு நடை போடலானுர்.

கிழவர் முடிச்சைக் கவர்ந்து கொண்டு நடை போட்டுப் போகையில் அடுத்த வீட்டின் வெளித்திண்ணை தோறும் உறக்கத்துக்குக் காத்துக் கிடந்த சிலரின் கண் பார்வைகள் அவர் மீது சாடலாயின. அவைகளை எல்லாம் பொருட் படுத்தாமல் விறுவிறுவென்று நடந்து சென்ற கிழவர் எதிர்ப் படும் வீதிகளைக் கடந்து அரண்மனையை நோக்கிச்

செல்கையில் எதிரே சல்வாதுப் புலவர் வீடு தென்பட்டது. அன்று தினம் வெள்ளிக்கிழமை இரவாதலால் புலவர் மசூதிக்குச் சென்றவர் வீட்டைப் பூட்டிவிட்டுப் போயிருந்தார்.

அப்பொழுது கிழவர் மாற்றுத் திறவினுல் அந்த வீட்டைத் திறந்து உள்ளே சென்றவர் தான் கொண்டு வந்த முடிச்சை அங்கொரு மறைவான விடத்தில் ஒளித்து வைத்துவிட்டு வீட்டையும் முன்னிருந்தபடி பூட்டியவர் காலில் செருப்பணிந்து கொண்டு அவர் இருப்பிடத்தை நோக்கிச் சென்று விட்டார். சற்று நேரத்திற்குப் பின் பள்ளிவாயிலிலிருந்து திரும்பிய புலவர் ஏதும் அறியாதவராய் வீட்டினுள் சென்ருராதலால் வழக்கம் போல் அவர் கண்ணயர்ந்துவிட்டார்.

சிறிது நேரம் சென்றிருக்கும். குறிப்புக்குடைய வீட்டில் துணி முடிச்சைக் காணேம்! இங்கே ஒரு கிழவன்தான் வந்தான். அவன் வாயில் திண்ணையில் படுக்க இடம் கேட்டான். நான் முடியாதென்று விரட்டினேன். அவன்தான் முடிச்சை எடுத்திருக்க வேண்டும் என்று தாய்க்காரி கூக்குரலிட்டாள். அதற்கு ஒத்தாப்போல அடுத்த வீட்டுத்திண்ணைகளில் படுத்திருந்தவர்கள், ஆம்! ஒரு கிழவன் கக்கத்தில் ஒரு முடிச்சை இடுக்கிக் கொண்டு இந்த வழியாகத்தான் போனுன் என்று அவர்கள் கண்ணுல் கண்டதைக் கூறினுர்கள்.

இப்படி நேரத்தில் இளம் பெண்ணிற்குச் சேலையும் கச்சும் வாங்கிக்கொடுத்த அந்த நல்ல மனிதர் என்று அந்தத் தாய் சொன்னவரும் குறிப்பிட்ட வீட்டிற்கு வந்து விட்டார். முடிச்சுக் களவு போன காரணமாகப் பல கூக்குரல் ஏற்பட்டு விட்டதால் அந்த நல்ல மனிதர் நாட்டங்கள் அங்கு நிறைவேறுவதற்குத் தடையாய்விட்டன.

பின் சுற்றிலுமிருந்த பலதிற மக்களும் வந்து கூடுகிற போது தடம் பார்க்கும் நிபுணர்களும் அதில் கலந்து கொண்டார்கள். கள்ளன் களவு என்ற கூக்குரல் பரவிவிட்டதால் அரசாங்கத்தைச் சார்ந்த தலையாரிகள் சேவகர்கள் பலரும் வந்து விட்டனர். எல்லாரும் சேர்ந்து தடம் பார்த்துச் செல்கிறபோது அந்தத் தடம் சவ்வாதுப் புலவர் வீட்டோடு நின்று விட்டது.

சவ்வாதுப் புலவரும் தாடியுடையவரும் தோற்றத்திலே ஓரளவு கிழமை காட்டக் கூடியவருமாதலால் அவர்மீது சிலர் ஐயுறுகிற போது, பாவம் புலவர் பெரிய மனிதர்! மேலும் அரசாங்கத்தைச் சேர்ந்தவர். அவரைப் பற்றி யோசித்து நடந்து கொள்ளுங்கள் என்றனர் சிலர். வேறு சிலர் இந்தப் புலவர் இத்தகைய இழிச்செயலா செய்வார்! அவர் அவ்வளவு கிழவரல்லவே. இன்னும் இந்த வீட்டில் அவர் மட்டும் தான் இராக்காலங்களில் தங்கி வருகிறார் என்று கூறினார்கள். இவ்வாறு நிகழ்ச்சி அரசாங்கத்தைத் தொடர்ந்தாற் போல் காணுகிறதால் இதைப்பற்றி நன்கு ஆலோசிக்கச் சேதுபதி மன்னரிடம் விரைந்து சென்றார்கள் தலையாரிகள். அப்பொழுது அரசர் இப்பொழுது நித்திரையில் இருக்கிற புலவருக்கு ஏதும் தொல்லை கொடுக்காதீர்கள்! பொழுது விடிகிறவரை அவர் வீட்டைக் காவல் காத்து அதிகாலையில் நடவடிக்கை எடுங்கள் என்று உத்தரவு பிறப்பித்தவர் குறிப்புக்குடைய வீட்டிலும் அயல் மனிதர் யாரும் செல்லாது பார்த்துக் கொள்ளுங்கள் என்று விட்டார்.

பொழுது புலர்ந்தது. புலவர் தனது வைகறைத் தொழுகைக்காகப் பள்ளிக்குப்போக வீட்டைத் திறந்து வெளியில் வருகிறபோது தலையாரி மற்றக் காவல்காரர் பலர் அங்குக் குழுமி நின்றனர். அவர்களை ஏதும் பொருட்படுத்தாதவராய் புலவர் வெளியேறிச் செல்கிறபோது, புலவரவர்களே! இராத்

திரி முழுவதும் உங்கள் வீட்டைத்தான் நாங்கள் காவல் காக்க நேர்ந்ததென்று நிகழ்ச்சியின் உண்மைகள் எல்லாவற்றையும் கூறினர் தலையாரிகள்.

புலவர் ஆச்சரியமுற்றுப் போனவர் என் வீட்டிற்குக் கிழவர் ஒருவரும் வரவில்லையே! நீங்கள் கூறுகிறது பிழையாய் இருக்கிறதென்று மறுத்தார். இங்ஙனம் மறுத்தலை அவர்கள் நம்பவில்லையாதலால் புலவர் வெகுண்டுபோய் என் வீட்டைச் சோதனை போட்டுக்கொள்ளுங்கள் என்று கூறினுர்.

அங்ஙனம் தலையாரி மற்றவர்கள் சோதனை போடுகிற போது அங்குத் துணி முடிச்சுக் கண்டுபிடிக்கப்பட்டது. இதைப் பார்த்துவிட்ட புலவர் ஏதோ ஒரு சூதல்லவோ நடந்திருக்கிறதென்ற சிந்தனையில் ஆழ்கிறபோது களவு போன முடிச்சு சவ்வாதுப் புலவர் வீட்டிலிருந்து கண்டுபிடிக்கப்பட்டது என்ற செய்தித் திக்குத் திக்காகப் பரந்துவிட்டது. இதைக் கேள்விப்பட்ட சேதுபதி மன்னர் நிகழ்ச்சியைத் தன் அரசாங்க விசாரணையாக எடுத்துக்கொள்கிறேன் என்று நடவடிக்கையில் சம்பந்தப்பட்ட எல்லோரையும் அரண்மனைக்கு வரும்படி கட்டளையிட்டார்.

பின் என்ன? சவ்வாதுப் புலவர் நன்ருய் மாட்டிக்கொண்டார். நடவடிக்கையை அரசரே நடத்தப் போகிருர். இதில் அவர் தப்ப முடியாது. இன்ரேடு அவர் கொட்டம் அடங்கிவிடும். இன்று முதல் அரண்மனையை மறந்துவிட்டு எமனீஸ்வரம் போய்விட வேண்டியதுதான் என்று அழுக்காறு கொண்டிருந்தவர்கள் பேசினுர்கள்.

விசாரணையில் அரசர் சவ்வாதுப் புலவரை நோக்கிப் புலவர் சிரோமணி ! நீங்களே ஒரு கலை முடிச்சு. இந்நிலையில் உங்களை இங்குத் தொடர்பு கொண்டிருக்கிறதும் கலை முடிச்சா

கவே காண்கின்றது. உங்களைத் தொடர்பு கொண்டுள்ள கலைமுடுச்சு, பெருமதிப்பிற்குரிய தன்றெனினும் அதற்கு உரித்தான இனத்தைக் கவனிக்கிறபோது உங்களை வேறு வகையில் வைத்துப் பேச வேண்டியதாய் இருக்கிறது. ஏன் உங்கள் மனோநிலை இவ்வாறு வேறு வகையில் சென்று விட்டதென்பதை உணர்கிறபோது அது வெளிக்குச் சொல்ல முடியாததாய் இருக்கிறதே என்று வருந்தும் தன்மையில் குத்தல் குதிகொள்ளப் பேசினார்.

அவ்வளவுதான். சவ்வாதுப் புலவர் மனவெளியிலே கருக்கூட்டிவிட்ட சிந்தனைப் புயல் சோதனை மின்னலாகப் பாய்ந்து எழுச்சி இடிமுழக்கி அமரத்துவ நிலை எய்தி விட்டதால் நடந்த உண்மைகள் அனைத்தும் அவர் வாய் வழியே கவிதை மழையாக வழிந்து விட்டது. அந்தக் கவிதை,

"தொட்டான் அயல்போய வேளை மகளையோர் சோரனிடம்
கட்டாயமாகக் கலவிசெய்யச் சொன்ன காரிகையில்
கட்டாடை தன்னைக் களவாடி என்னில் கரந்ததுநும்
பட்டாங் கதன்றோ ரகுநாத சேதுபதி மன்னனே"

இதன் பொருள் :—ஏ! இரகுநாத சேதுபதி மன்னனே! தன் மகளை மணமுடித்த கணவன் அயலிடம் சென்றிருக்கையில் மகளை ஒரு சோரனுக்கு உடன்படுத்தி அவனொடு புணரும்படி கட்டாயப் படுத்திய ஒருத்தியின் வீட்டில் கட்டிக் கொள்கிற ஆடைகளை களவு செய்து அவற்றை என் வீட்டில் ஒளித்து வைத்ததானது நீர் செய்துள்ள பகடியன்றோ? என்பதாம்.

இந்தப் பாடலில் தொட்டான் என வரும் முன்னிலைச் சொல்லைக் கைதொட்டான் எனக் கொள்க. (கை—தொகுத்தல் விகாரம்.)

இங்குச் சேதுபதி வேந்தர் சவ்வாதுப் புலவரிடமிருந்து இத்தகையதோர் தெய்வீகக் கவிதையைக் காணவேண்டு

மென்றுதான் இவ்வாறு சூட்சிகள் செய்ய முன்வந்திருப்பார். சவ்வாதுப் புலவர் தமது தெய்வீகக் கவிதையை வாயிலிருந்து வடித்துக் கொடுத்து விட்டபோது இரகுநாத வேந்தர் அன்றிரவில் கிழவேடம் பூண்டு ஊர்சுற்றிய போது முடிச்சுக் கவர்ந்த விவரம் அனைத்தையும் படிப்படியாக விளக்கப் படுத்தினர். அப்பொழுது சபையினர் யாவரும் சவ்வாதுப் புலவரின் மகிமை கண்டு வாயார வாழ்த்தினர்கள். சவ்வாதுப் புலவர்மீது அழுக்காறு கொண்டிருந்த புலவர்களும் அன்றேடு தங்கள் அழுக்காறுகளை ஒழித்தவர்களாய் அவர்க்கு அடங்கி நடக்கத் தலைப்பட்டனர்.

இந்த இரகுநாத சேதுபதி காலத்தில்தான் எட்டையா புரத்தைச் சங்கரேஸ்வர எட்டர் அரசு புரிந்து வந்தார். இற்றைக்கும் திருவில்லிபுத்தூர் மாவட்டம் இராமநாதபுர மாவட்டத்தோடு இணைந்திருப்பது போல அக்காலத்தும் அவ்வெல்லைகள் சேதுபதி அரசுரிமையிலேயே இருந்து வந்தன. அப்பொழுது வில்லிபுத்தூர் மலைப்பகுதிகளில் பயிராகின்ற தேக்கு மற்றும் கனிகாய்ப் பொருள்களைச் சேதுபதி ஆணையின்றி எட்டையாபுரத்தினர் கவர்ந்து கொண்டு போயினர். இவ்வாறு அவர்கள் கவர்ந்துகொண்டு போவதற்கு வில்லிபுத்தூர் மலைப்பகுதிகள் எட்டையாபுரத்துக்குடையதென அவர்கள் தவறு மனப்பான்மை கொண்டிருந்ததே. இதையறிந்த இரகுநாதவேந்தர் தனது அரசாங்கச் செயலாளரான சவ்வாதுப் புலவரை எட்டையாபுரம் அனுப்பி அவர்கள் தம் எல்லைப் பிரதேசத்தில் நுழைவு கொள்வதைத் தடை செய்து வருமாறு பணித்திருந்தார்.

இதற்காகப் எட்டையாபுரம் சென்ற சவ்வாதுப் புலவர் அரசனைச் சந்தித்துப் பேசுவதற்குப் பல நாட்கள்காத்திருக்க வேண்டியதாய் விட்டது. அமைச்சர்கள் இராமநாதபுரத்திலிருந்து மகுடப் புலவர் வந்திருக்கிருர் என்பதை அரசரிடம்

கூறிய போதும், அரசர் எந்த மகுடம்? சேதுபதி வந்து விட்டாரோ! வென்று சவ்வாதுப் புலவரையும் கூடச் சேதுபதி தரத்தையும் ஏளனம் தவழப் பேசியது புலவரின் செவிகளில் பட்டுவிட்டது.

இதிலெல்லாம் புலவர் பெருந்தகை தனது பொறுமையை இழந்துவிடாதவராய்க் காத்திருந்து ஒரு நாள் அரசன் கொலு மண்டபம் விட்டு அந்தப்புரம் செல்கையில் அவனை எதிர்கண்டு தான் வந்திருக்கிறது பற்றித் தெரிவிக்கலானார். அப்பொழுதும் எட்டன் சவ்வாதுப் புலவர் வார்த்தையைக் காதில் வாங்கியும் வாங்காதவருமாய்ப் பதிலொன்றும் கூறாது அசட்டு மனப்பான்மையோடு போய்விட்டார்.

இதனால் பெரிதும் மனமுடைந்துபோன புலவர் அடுத்த நாள் அரசர் சிங்கக் கட்டிலில் செம்மாந்திருக்கையில் நேரில் போய் உமது குடிகள் எங்கள் எல்லைப் பகுதியில் நுழைவு கொள்கிறது எம் சேதுபதியின் மன அமைதியைக் குலைக்கிறதாகக்கூடும் என்றனர்.

இதிலிருந்து எட்டருக்கும் சவ்வாதுப் புலவருக்கும் வாக்கு வாதங்கள் நீடிக்கலாயின. அங்கு அரசர் பேசிய சட்டவொழுங்கற்ற வார்த்தைகளிலிருந்தும் இவ்வரசன்தான் தன் குடிகளை எல்லைப் பகுதியில் நுழைவு கொள்ளும்படி தூண்டி இருக்கிறார் என்பதையும் அறிந்து கொண்டார் புலவர். இது காரணமாகவே பின்னொரு முறையும் சேது பதி மன அமைதியைக் காக்கிறதுதான் நல்லதென்று கூறினார் புலவர்.

இவ்வார்த்தை சங்கரேஸ்வர எட்டரை அச்சுறுத்துவது போல் இருந்ததால் சிங்கக் கட்டிலிலிருந்த அரசரது கண்களிரண்டிலும் சிவப்பு ஏறிவிட்டது. முகம் வெள்ளைத் தாமரைபோன்று வெளிறிவிட்டது. அப்பொழுது வெகுளியின் விறு விறுப்பிலே சவ்வாதுப் புலவரை ஏறிட்டுப் பார்த்த

எட்டர் இப்படி வார்த்தையை என்னிடம் பேசுவதற்கு நீரென்ன தகுதி. உமது சேதுபதியன்றோ இங்கு வரவேண்டும் என்று துடுக்காகவும் இறுமாப்பாகவும் பதில் கூறினான்.

அவ்வளவுதான். சவ்வாதுப் புலவர் மனவெளியிலே புரட்சிப் புயல் சுழன்றடிக்கத் தலைப்பட்டுவிட்டது. பலமுறையும் நாம் இந்த அரசனோடு உரையாடினோம். அவற்றிலெல்லாம் இவன் அகந்தை துளும்பவே பேசுகிறான். இஃதல்லாமல் எல்லாரும் இவனிடம் சிரம் சாய்க்க வேண்டுமென்றும் கருதுகிறான். இதற்குமேல் இவனையொரு தட்டுத்தட்டினால் தான் சரி என்று எண்ணி விட்டவர், ஏ! மட்டப் புகழ் விரும்பும் எட்டரே! என் அரசன் பின்னரசன் எவனுக்கும் முடிசாய்ப்பவனல்லன் என்பதை நீர் இது காறும் அறிந்திலிரோ வென்று விறுவிறுப்போடு ஒரு வார்த்தையை வீசினார்.

இவ்வார்த்தை போய் அங்கு இறுமாந்திருந்த எட்டனையொரு தட்டுத் தட்டிவிட்டதால் அவன் திகைப்பில் ஆழ்ந்து மெய்மறந்து போனவன் சில விநாடிகள் வரை பேசாதிருந்துவிட்டுப் பின் உம் அரசன் ஒருவர்க்குமே முடிசாய்க்க மாட்டானோ வென்று கேட்டான். புலவர் சிலவிடங்களில் சாய்ப்பதும் உண்டு என்றார். அதற்கு எவ்விடங்களிலென்று ஆவலோடு கேட்டான் எட்டன். அதையும் கூற வேண்டுமோ என்றார் புலவர். எட்டன் ஆம்! கூறத்தான் வேண்டுமென்றான்.

புலவர், எம் சேதுபதி முடிசாய்ப்பதில் இரு வகையுண்டு. அவை ஓரிடத்தில் அவன் முழு முடி சாய்த்தல், மற்றோரிடத்தில் அரைமுடி சாய்த்தல் என்றார். இச் செய்தி மேலும் எட்டனுக்கு மனப்புரட்சியை உண்டு பண்ணியதால் முடி சாய்ப்பதிலும் முழு முடி வேறு, அரை முடி வேறா? அப்படியாயின் அதை விளக்கப் படுத்தும் என்று

கேட்டான். உடனே இவ்விளக்கத்தைப் பாடல் நயமாக மிக அழகாகப் பாடிவிட்டார் புலவர். அப்பாடல்,

''கிளையாளன் சேது பதிரகு நாயகன் கிஞ்சுகவாய்
இளையார் கலவி இடத்தும் நமதீச ரிடத்துமன்றி
வளையாத பொன்முடி சற்றே வளையும் மகுடமன்னர்
தளைபாடிடக் கையில் காளாஞ்சி ஏந்தும் சமயத்துமே''

என்பதாம். இதன் பொருள் :—நீண்ட பரம்பரையை யுடைய எம் சேதுபதி தான் வழிபடு கடவுளை வணங்குகின்ற விடத்தும், பின் முள் முருக்குப் போன்ற சிவந்த இதழ் களையுடைய தன் இல்லக் கிழத்திகளுடன் இன்பம் நுகர்கிற விடத்தும் அவன் முழு முடிசாயும். இஃதல்லாமல் அவன் அணிந்திருக்கிற பொன்முடியானது அவன் அரியணையி லிருந்து தாம்பூலம் தரிக்கிறது கண்ட மகுட மன்னர்கள் தங்கள் கைகளில் எச்சில் படிக்கத்தை ஏந்திநிற்கிற பொழுது அவன் அரைமுடி சாயும் என்பதாம்.

இங்கு ஆண்டவனை வழிபடுகிற விடத்தும் இல்லற இன்பம் துய்க்கிறவிடத்தும் அரசன் முடியணிந்திருக்க மாட்டான். அப்பொழுது அவன் சிரம் எவ்வளவு வேண்டு மென்றாலும் சாய்ந்து கொடுக்குமாதலால் இந்நிலையை முழு முடி சாய்த்தல் என்று கூறினர். பின் எள்ளத்தனையும் எவ ருக்கும் சாயாத அவன், பொன் முடியணிந்து அரியணையில் இருக்குங்கால் அவன் தாம்பூல எச்சிலை வாங்குவதற்காக நும்போன்ற மகுட மன்னர்களே உச்சி மயிர் சிலிர்க்கக் கை களில் காளாஞ்சியை ஏந்தி நிற்கிறபோது அவன் எச்சில் உமிழ மெல்லெனத் தன் சிரத்தைச் சாய்க்கிருனதலால் அங்கு அவன் அரை முடிசாயும் என்று பொருள் படுத்தி னர் புலவர்.

புலவர் இப்பாடலிலே சங்கரேஸ்வர எட்டனுக்கு ஒரு சரம் தொடுத்து விட்டாராதலால் அது அவன் மார்பில்

பாய்ந்து புரையோடிப் போய்விட்டது. இதனால் சவ்வாதுப் புலவர் முன்னிலையில் பெரிதும் மனம் வெள்கிப்போன எட்டன் இந்தப் புலவர் நமது உடலைக் கூறு படுத்தவில்லை. உள்ளத்தைப் பிளந்து புண்ணை உண்டுபண்ணிவிட்டார் என்பதில் வெகுண்டு விட்டவன் எல்லைத் தகராறு தீர்ப்பது இப்போது முடியாது. தீர்க்கிறபோது தீரும் என்று கோபக் கனல் பாயப் பேசினான்.

புலவர் ஏ, எட்டரே! நும் மனக்கிடக்கை இப்படியாயின் நான் இனி எல்லைபற்றிப் பேச இங்கு வருகிறவனல்லன். நீர் எப்படியும் சேதுபதியிடம் வந்தே தீர்வீர் என்று ஒரு வார்த்தை கூறிவிட்டுத் திரும்பிவிட்டார்.

பின் காலப்போக்கிலே சேதுபதியின் காவற்படைகள் எட்டையாபுரத்தினரைத் தங்கள் எல்லைக்குள் அடி மிதிக்க விடாது விரட்டியடிக்கத் தலைப்பட்டதையறிந்த எட்டர் இராமநாதபுரம் தென் பகுதிச் சாகுபடிக்கு வடிகாலாய் இருந்த குற்ருலப் பெருவாய்க்காலைத் திருப்பிவிட்டு அதற்கொரு பெரிய அணைகட்டும் போட்டுவிட்டார். வாய்க்கால் அடைபட்டது குறித்து சேதுபதி மக்கள் கூக்குரலிடுகையில் மழை மட்டும் பொழியட்டும் வாய்க்கால் வாய்க்காலாகத்தான் இருக்குமென்ருர் சவ்வாதுப் புலவர்.

ஏதோ சோதனையைப் போல அவ்வாண்டு பருவ மழை முந்திக்கொண்டது. இரவும் பகலும் வானம் இடைவிடாது பொழிந்து கொண்டிருந்ததால் நீர்த் திருப்பம் எட்டர் நாட்டினுள் கொள்ளைக்குப் புறப்பட்டுவிட்டது. அணைக்கட்டை எப்படியும் திறந்துவிடவேண்டும். இல்லையேல் அவர்கள் பகுதிகளிலுள்ள விளை நிலங்களையும் பல சிற்றூர்களையும் வெள்ளம் இரைகொள்வது எதிர்பார்க்கப் பட்டதாய் இருந்தது. இதுகாரணமாக மக்கள் திரள் திரளாக எட்டரிடம் போய் அணையைத் தகர்த்தெறியுங்கள் என்கிறபோது எட்டர்

நாமே அணையைப் போட்டுவிட்டு நாமே தகர்த்தெறியவும் முற்படுகிறது மிகக் கேவலம். இப்படிக் கேவலமடைவதை விட நேரே சேதுபதியிடம் போய் எல்லைத் தகராற்றைத் தீர்த்துக் கொள்வது மேல் என்று இராமநாதபுரம் புறப்பட்டுப் போனார்.

சங்கரேஸ்வர எட்டர் வலியவந்ததை அறிந்தசேதுபதி மேலும் அவருக்கு மதிப்புக் கொடுத்து வரவேற்றாரே யன்றி ஏதேனும் பழம்பகை கொள்ள முற்படவில்லை. எல்லைத் தகராறுகள் ஏற்கெனவே சேதுபதி கோரிக்கைப்படி மிகச் சுலபமாக முடிவடையப்பட்டன. இதனால் எட்டருக்கு அரசாங்க மரியாதை செய்து வழியனுப்பி வைக்க ஏற்பாடு செய்தார் இரகுநாத வேந்தர்.

அப்பொழுது உபசரிப்புக் குழுவில் சிங்கேறு போன்று வீற்றிருந்த சவ்வாதுப் புலவரைப் பார்த்துவிட்டார் சங்கரேசுவர எட்டர். இன்னமும் அவரது வசை மொழிக்கு ஆளாக வேண்டுமென்பது சங்கரேசுவர எட்டர் தலைவிதியாய் இருந்தது போலும். தாம் எல்லைத் தகராற்றை நேரில் அரசனிடமே தீர்த்துக் கொண்டோம் என்ற இறுமாப்பிலே பட்ட மன்னர் சிக்கல்களைப் பட்ட மன்னர்கள்தாம் தீர்த்துக் கொள்வர் என்று எழுச்சி ததும்ப ஒரு வார்த்தை கூறினார்.

இவ்வார்த்தை சவ்வாதுப் புலவரைக் குத்தல் படுத்தியதால் அவர் உடனே முல்லைப்பூவும் மலர்தான். முருக்கம் பூவும் மலர்தான். இவை இரண்டும் இனத்திலே ஒன்றேயாயினும் குணத்திலே வேறுபாடுடையது என்று விட்டார். இவ்வார்த்தையைக் கேட்டு விட்ட சேதுபதி ஒன்றும் விளங்காதவர் போல நீங்கள் என்ன சொன்னீர்கள் என்று சவ்வாதுப் புலவரிடம் கேட்டார்.

அதற்கவர் ஏ, எட்டுத்திக்கினரும் பற்றுடன் போற்றும் இரகுநாத வேந்தரே! உன்னிடம் அரசின் தகுதி அழகு

பெற அமைந்திருக்கிறதால் நீர் மன்புவி ஆளப் பொன் பட்டம் சூடி இருக்கிறீர். இத்தகுதியே பட்ட மன்னர்களது பண்பினை விளக்குவதாயுள்ளது. இஃதல்லாமல் வேறு பலரும் நாங்களும் நாடாளு மன்னர்களே என்று பட்டம் சூடி இருக்கின்றனர். இத்தகையோர் சூடுகிற பட்டமெல்லாம் விளம்பரத்துக்காக முழவர்கள் தோலைக் காய்ச்சி அடிக்கிற தம்பட்டமல்லாது வேறில்லை என்னும் கருத்துப்பட கீழ்க் காணும் பாடலைப் பாடிவிட்டார். அப்பாடல்,

"அன்பட்ட திக்கெங்கும் போற்றும் தென்கோட்டுக் கதிபதியாய்ப்
பொன்பட்டம் சூடும் ராகுநாத பூபஇப் பூதலத்தில்
நின்பட்ட மேபட்டம் நீயேதுரை மற்றின் னிணிலத்தில்
தன்பட்டம் என்பட்டம் தோலா லடித்திடும் தம்பட்டமே"

என்பதாம். இப்பாடலை உணர்ந்துவிட்ட இரகுநாத வேந்தர் இத்துடனாவது நம் புலவர் பாடலை நிறுத்தி விடட்டும் என்றெண்ணி சங்கரேசுவர எட்டரையே இடித்துரைக்க முன்வந்தார். அது எட்டரே! எம் புலவர் உம்மிடத்தில் எல்லை முடிவு பெற வந்த இடத்தில் நீர்தான் அவரை மதியாது விதண்டாவாதம் தொடுத்திருக்கிறீர். இவ்விடத்திலும் நீர்தான் குத்தல் வார்த்தை பேசியுள்ளீர்! இதன் எதிரொலிகள்தாம் இப்பொழுது புலவர் வாயைக் கிளறச் செய்து விட்டன, என்று கூறி முடிவிலே சங்கரேசுவர எட்டரையும் சவ்வாதுப் புலவரையும் ஒன்றுபடுத்தி வைத்தார்.

———

பனைக்குளம்

## 3. சிந்துக் களஞ்சியப் புலவர்

பனைக்குளம் என்னும் முஸ்லிம் மூதூர் இராமநாதபுரத்திற்குக் கிழக்கே (ஏழு மைல்) வடக்குக் கடலிற்கும் வைகையாற்றிற்கும் நடுவண் அமைந்துளது. இவ்வூரிலே பழமை தொட்டு வாழ்ந்து வருகிற முஸ்லிம் குலக்கொடியில் காலங்கள் தோறும் சிறந்த தமிழ்ப் புலவர்கள் காய்த்துக் குலுங்குவதை அறியலாம். இப்புலவர் பெருமக்களைச் சீருப்புராணம் பாடிய உமறுப் புலவரின் வழித்தோன்றல்கள் என்பர் ஆராய்ச்சிக்காரர். இவர்களில் பதினெட்டாம் நூற்ருண்டின் இறுதிகாலப் புலவராய் விளங்கியவர்தான் செந்தமிழ்ச் செல்வர் சிந்துக் களஞ்சியப் புலவர்.

இம்மரபினர்கள் தங்கள் இயற்கைப் பெயர்க்கு இறுதியில் களஞ்சியம் என்னும் சிறப்புப் பெயரையும் இயைத்து வந்திருக்கிறது ஒரு குறிப்புக்குடையதாய்த் தோணுகிறது. இதுபற்றி ஆராயப்புகும் போது பாவனுக் களஞ்யசிம், உமறுக் களஞ்சியம், முகம்மதுக் களஞ்சியம், நயினுர்க் களஞ்சியம், முத்துக் களஞ்சியம், ஹமீதுக் களஞ்சியம் என்ற பெயர்களை இவர்கள் வழங்கி வந்துள்ளது சான்ருகக்கூடும். இன்னும் இவர்கள் உமறுப்புலவரவர்களின் வழித்தோன்றல் என்பதை அறிவிக்கும் முகத்தான் இங்குக் களஞ்சியத்தைச் சிறப்பாகக் கொண்டுள்ளனர் எனவும் முதியவர்கள் சிலர் கூறக் கேட்கின்ருேம்.

இங்குச் சிந்துக் களஞ்சியம் அவர்களின் இயற்பெயர் முகம்மதுக்கான் என அறிகின்ருேம். இவர் நாளடைவில் கல்வி கேள்விகளில் சீர்த்தியும் சிறப்பும் பெற்று மிக்காராய்த்

திகழ்வது கண்ட இவர் முதியவர்கள் இவர் பெயரிலுள்ள கான் என்பதை மாற்றி, களஞ்சியம் அதாவது முகம்மதுக் கான் என்ற பெயர் முகம்மதுக் களஞ்சியம் என்பதிலே அவர் தாயார் யாது காரணமாகவோ கல்விக் களஞ்சியம் என்ற பெயர் சூட்டி அழைத்ததையும் நாம் கேள்விப் படுகிறோம். இப்படிப் பலவகைத்தும் பெயர் மாற்றத்துக்கிலக்கான இவர் சிறந்த தமிழ்ப் புலமையிலும் தெளிந்த ஆத்மிகஞானத்திலும் தேர்வு பெற்றவராய் விளங்கினர்.

இதன் எதிரொலிகளே இஸ்லாமியத் தத்துவங்களை உள்ளடக்கமாகக் கொண்ட இனிய செந்தமிழ்த்தேன் சொட்டும் சொல்லழகும் கருத்தாழமும் உடையதான சொர்க்கத்து அந்தாதி என்னும் இஸ்லாமிய இலக்கியத்தை உருவாக்கித்தர நேர்ந்தன. இத்தகைத்து இவர் புலமையில் முதுமை பெற்றிருந்தாலும் தன் வாழ்க்கைப் பாதையை வளமுறச் செய்வதற்குச் சங்கு வணிகத்தைக் கைக்கொண்டு திறம்பட நடத்தினர். வணிகத்தின் தொடர்புகளால் அடுத்தடுத்து இவர் முஸ்லிம் மூதூராகிய கீழைக்கரைக்குச் செய்வது வழக்கம்.

இத்தொடர்புகள் இவரைக் கீழைக்கரையில் அரபியிலும் தமிழிலும் தேர்வு பெற்றுத் தவசிலராய் விளங்கும் பெரிய தம்பி மரக்காயர் அவர்களின் பெய்யன்பிலும் கூட்டுறவிலும் கலப்புறச் செய்துவிட்டன. தவத்திரு மரக்காயர் அவர்களை "ஒலியுல்லா" அடிகள் என்று சொல்வார்கள் பெரியோர்கள். மரக்காயரவர்கள் கல்விக் களஞ்சியம் அவர்களின் ஆத்மிகப் பெற்றியினை நன்கு அறிந்து கொண்டார்களாதலால் ஒரு நாள் அவரை வாரும் சிந்து என்று சுருங்கக்கூறி அழைத்தார்கள்.

சிந்து என்ற சொல் "ஞாயிறு" என்று பொருள் தரும். ஞாயிறு உலகிருள் அகற்றுவது போல இவர் மனத்திருள்

அகற்றும் மாண்பினர் என்பதுதான் மரக்காயர் கொண்டுள்ள கருத்து. இனிச் "சிந்து" களஞ்சியத்தோடு புணருகிறபோது ஒளிப்பிழம்பு என்ற பொருளை உணர்த்துகிறது. இங்குச் சிந்து ஞாயிறு என்பதற்கு " சிந்து வெம்கதிர் எழுந்தது விழுந்தது திமிரம் " ' சீறு ' உமறுகத்தாப் ஈமான் கொண்ட படலம் பாடல் (5) உரையால் அறியலாம். அன்று முதல் கல்விக் களஞ்சியப் புலவர் பெரியோர் வாக்கைப் பெயர்த்தெறிய லாகாதெனத் தன் பெயரை, சிந்துக் களஞ்சியம் என்று திருத்திக் கொண்டாரெனத் தெரிகிறது.

இப்புலவர் ஒருபோது இலங்கை செல்ல வேண்டுமென்று எண்ணியவர் அங்கிருந்த தமதன்பர் காயல்பதி அஹ்மது லெப்பை ஆலிம் அவர்களுக்கு எழுதினர். அன்னரும் புறப் பட்டு வாருங்கள் என்று மறுமொழியளித்தபின் அவர் அங்குப் புறப்பட்டுச் சென்றார். அஹ்மது லெப்பை ஆலிமுக்கு இலங் கையில் பெருத்த கச்சவடம் உண்டு. அவர் கப்பல் துறைக்கு வந்து புலவரை அழைத்துச் சென்றவர் சிலநாள்வரை அவர் வர்த்தக நிலையத்திலேயே இருக்க வைத்திருந்தார்.

அஹ்மது லெப்பை ஆலிமிடம் வர்த்தகத் தொடர்பு கொண்டிருந்த பெரிய மனிதர் சிலர் சிந்துக் களஞ்சியப் புல வரைக் கண்டு கொண்டபின் அவர் வாயிலிருந்தும் சொல் விருந்து உண்ண வேண்டுமென்று எண்ணினர். வேறுபலர் மனங்களிலும் இப்படி நினைவுகள் பிடர் பிடித்து உந்திக் கொண்டிருந்தன.

நமது காலத்தைப் போலப் பொதுக் கூட்டங்கள் உரை வழங்குதல் அந்தக் காலத்தில் நடப்பன அரிது. எனினும் அடுத்தடுத்து, புராண விளக்கங்கள் நடப்பன உண்டு. இஸ் லாமியர்களின் புனித நூல்களான சீறுப்புராணம் முகியத்தீன் புராணம் மற்றவைகள் உரை பகர வாய்த்தால் அதில் தமிழ்ப் பற்றுள்ள தமிழர்களும் பங்கு பெற்றுக் கேட்டு மகிழ்வர்.

சைவ புராணம் இராமாயணம் போன்ற நூல்கள் உரைபகர்கிற இடங்களில் முஸ்லிம்களும் கலந்து கேட்பது வழக்கம். கொழும்பில் இஸ்லாமியப் பெருமக்கள் முயற்சியில் சிந்துக் களஞ்சியப் புலவரால் சீருப்புராணம் பொருள் படுத்தப்பட்டது. புலவர் விளக்கத்துக்கு எடுத்துக் கொண்டது "பாதை போந்த படலம்" நபிகள் பெருமான் (ஸல்) அவர்கள் முதலாவதாக வர்த்தகம் செய்யவே விரும்பினர்கள். வர்த்தகத்திலே உயர்ந்த பண்பாடுகள் இருக்கக் காண்கின்றோம். நம்பிக்கை, நல்லொழுக்கம், அடக்கமுடைமை, திடசித்தம் இவைகளெல்லாம் வர்த்தகத்தின் உடல் கூறுகள் போல்வனவாகும்.

வர்த்தக நிலை காரணமாகத்தான் நபி பெருமான் (ஸல்) அவர்களுக்கும் கதிஜா சீமாட்டி அவர்களுக்கும் தூயதானதோர் தொடர்பு ஏற்பட்டது. இத்தொடர்பின் உயரிய பயன்களே நாளடைவில் அவ்விருவரையும் அன்புக் கயிற்றால் பிணித்து அவ்விருவரது மனத்தில் முளைத்த காதல் அரும்பை மலரச் செய்தது. இதில் கதிஜா பிராட்டியார் ஒரு விதவையார் என்பதை அறிந்தும் நபி பெருமானார் (ஸல்) அவர்கள் கதிஜாவை முதலாவது பிராட்டியாராக மணந்து கொண்டது விதவைகளுக்கு இஸ்லாத்தில் முதலிடம் இருக்கிறதென்பதையே உறுதிப்படுத்துகிறது. இன்னும் வாழ்க்கைத் துணைவி என்பது கன்னிப் பருவம், இளமை, அழகு, பணப் பெருக்கு, இவைகளுக்குத்தாம் இருக்கின்றன என்பதைவிட மன ஒருமிப்பு, தராதரம், தூய அன்பு இவைகளிலேயே பெருமை பெறுகின்றன என்ற உயர்ந்த கருத்துக்கள் பலவற்றையும் அந்தந்தப் பாடல்களுக்குத் தக்கவாறு விரிவு படுத்தி வந்தார் புலவர்.

இந்த ஒரு படலம் பொருள் படுத்தி முடிவதற்கு மூன்று வாரங்கள் சென்று விட்டன. தமிழறிவு பெற்றுள்ள பல சமூ

கத்து மக்களும் புலவர் செப்பிய பொருளுரையைப் பாராட்டினார்கள். அப்பால் அஹமது லெப்பை ஆலிமுக்கு அறிமுகமான நயினுர் முகம்மது என்பவர் புலவரிடம் வந்து 14, ஊர் பெயர்கள் அந்த ஊர்களின் ஈறுகளெல்லாம் தூர், தூர் என்றே வர வேண்டும். அவற்றில் ஏதேனும் இடைச் சொற்கள் கலக்கக் கூடாது!. இப்படி அமைப்புள்ள ஒரு வெண்பா பாடித்தர வேண்டும் என்று கேட்டார்.

புலவர் ஆச்சரியப்பட்டவராய், நீங்கள் எதற்கு இவ்வாறு கேட்கிறீர்கள் என்று வினவிய போது, நாங்கள் இருக்கிறது உள்நாடு. எங்கள் பகுதிகளில் அடிக்கடி தொத்து நோய்கள் ஏற்படுகின்றன. இத்தகைய தொத்து நோய்களிலிருந்து நாங்கள் தப்புவதற்கு மேற்கண்டவாறுள்ள ஊர்களைப் பாடலாக அமைத்துத் தாயத்துப் பண்ணிப் போட்டுக் கொள்ளுங்கள் என்றும் நோய் பரவுகிற காலங்களில் அந்தப் பாடலைப் பாடிக் கொண்டிருங்கள் என்றும் ஒரு பெரிய மனிதர் கூறினுர் என்ருர். புலவர் சிறிது நேரம் ஆழ்ந்து சிரித்து மகிழ்ந்துவிட்டு உங்களுக்கு நம்பிக்கை இருந்தால் பாடித் தருகிறேன் என்றவர்,

''சேத்தூர் முதுவளத்தூர் சித்தூர் திருப்பத்தூர்
மாத்தூர் சிறுகளத்தூர் மல்லத்தூர்—ஆத்தூர்அம்
பல்லத்தூர் சாத்தூர் பழம்புத்தூர் கம்பத்தூர்
வல்லத்தூர் வில்லிபுத் தூர்''

என்று பாடிக் கொடுத்தார்.

பின் துரைச்சாமி, நாராயணன் என்னும் இரு தமிழர்கள் புலவரிடத்தில் வந்து கோழிகூவி பொழுதுவிடிகிறதா, சேவல் கூவி பொழுது விடிகிறதா என்று கேட்டார்கள். புலவர் நீங்கள் கூறுகிற இரண்டு வார்த்தைகளும் பொருத்தம்தான். கோழி என்பது பொதுப் பெயர். சேவல் என்பது கோழி இனத்தில் ஆண் பெயர் என்ருர். இவர்களில் துரைச்சாமி சிறிது தமிழறிவு பெற்றிருப்பார்

போலும். அவர் கோழிகூவிப் பொழுது விடிகிறதென்று வழக்குகள் இருந்தால் கூறுங்கள் என்ருர். அதற்கு,

"தையல் துயர்க்குத் தரியாது தம்சிறகாங்
கையால் வயிறலேத்துக் காரிருள்வாய்—வெய்யோனே
வாவுபரித் தேரேறி வாவென் றழைப்பனபோல்
கூவினவே கோழிக் குலம்:" (நளவெண்பா: 114)

என்ற பாடலேப் படித்துக் காட்டினுர் புலவர். துரைச்சாமி நீங்கள் கூறியது பொதுவாகக் கோழிக்குலம் என்றல்லவா காண்கின்றது. எங்களுக்குக் கோழிக் கூவியது என்று ஒருமைப்பட வல்லோ வேண்டும் என்று பின்னும் வேண்டினுர். அப்படியாயின் சங்க இலக்கியங்களிலிருந்து விளக்கம் தருகிறேன் என்று,

"உய்த்தனர் விடாஅர் பிரிந்து இடைகளேயார்
குப்பைக் கோழித் தனிப்போர் போல" (குறுந்தொகை: 305)

என்ற பாடலில் குப்பை மேடுகளில் ஒன்ருேடொன்று போர் புரிந்து கொள்கின்ற கோழிகள் சேவல்களேயாம். இத்தகைய சேவல்களே கூவும் தன்மையன. இன்னும்,

குக்கூ வென்றது கோழி அதன்எதிர்
துக்கென் றன்று என்தூய நெஞ்சம்" (குறுந்தொகை: 157)

என்ற பாடல் மருதத்திணேயாக வந்தது. இத்திணே ஒன்றுபட்டிருக்கிற தலேவன் தலேவியரைப் பிரித்து வைப்பதாகும். அதிகாலேயில் கோழி, குக்கூவென்று கூவியவுடன் பொழுது விடிகிறதென்று உணர்ந்துவிட்ட தலேவி தன் தலேவன் அணேப்பிலிருந்தும் எழுந்து அகன்று விடுகிருள் என்பதை இந்தப் பாடல் விளக்கப்படுத்துகிறது. ஆகவே இங்கு வைகறைப் பொழுதில் குக்கூ வென்று கூவுகிற கோழி சேவலேயாதலால், சேவலேக் கோழி என்ற பொதுப் பெயரால் அழைக்கலாம் என்று விளக்கம் கொடுத்தார் புலவர். இவ்

விளக்கத்தைக் கேட்ட துரைச்சாமி நாராயணன் எனக்குத் தோல்வியுற்ருரென்று கூறிவிட்டுப் போனுர்.

பின்னெரு நாள் அஹ்மது லெப்பை ஆலிம் சிந்துக் களஞ்சியப் புலவரைச் சிலாபத்துக்கு அழைத்துக் கொண்டு போனுர். அப்பொழுது சிலாபத்தில் தமிழர்கள் குடி ஏற்றம் சிறிது அதிகமாய் காணப்பட்டது. அங்குத் துரைத்தனத் தாராகக் கடமை புரிகிறவர்களில் அநேகர் யாழ்ப்பாணி களாகக் காணப்பட்டனர். அங்கு வல்லிவராயர் என்னும் செல்வர் ஒருவர் புதிதாக மாரியம்மன் கோயில் கட்டி வழி பாடு புக்கு விழா நடத்தியவர் தமிழகத்திலிருந்து ஒரு பண் டிதரை யழைத்துப் பெரிய புராணப் பிரசங்கம் நடத்திக் கொண்டிருந்தார்.

பிரசங்கம் கேட்டவர்கள் பிரமாதமாய் இருக்கிற தென்று புகழ்ந்து கொண்டிருந்தார்கள். இச்செய்தி சிந்துக் களஞ்சியப் புலவருக்கு எட்டியது. அவர் நானும் இன்றிரவு பிரசங்கம் கேட்கப் போகிறேன் என்று அஹ்மது லெப்பை ஆலிமிடம் கூறினுர். அதற்கு நீங்கள் சென்ருல் நானும் கூட வருகிறேன் என்ருர் அவர். இவ்விருவரும் அங்குப் போகிறதை அறிந்த வேறு சில முஸ்லிம்களும் அவர்களோடு தொடர்ந்து கொண்டார்கள்.

பிரசங்கம் செய்கிற பண்டிதர் பெயர் செந்தூர் பிள்ளை. அவர் பிறந்த ஊரே செந்தூர்தான். அவரைப் பண்டிதர் அல்லது பிள்ளை என்று அழைப்பது வழக்கம். நல்ல வாட்ட சாட்டமான ஆள். இடைக்கச்சைத் தாறுப்பாய்ச்சிக் கட்டிக் கழுத்தில் மணிகள் அழுத்திய அணிபூண்டிருந்தார். பள பளப்பான அவர் ஊற்றுக் கோலிலும் மணிகள் பதித்து அதைக் கையில் பிடித்தவாறு பெரியதோர் பண்ணையாரை யொத்துக் கூட்டத்திற்கு வந்தார். அங்கிருந்தவர்கள் எல் லாரும் அவருக்கு மரியாதை வழங்கி வரவேற்று அணையில் அமரச் செய்தார்கள்.

பல கவிதைகளைப் பொருள்படுத்தி வந்தார். அவர் கருத்துக்களைக் கேட்டுக் கொண்டிருந்த நம் புலவரும் தன் தலையை அசைத்தவாறு பொருளின்பத்திலே திளைத்துப் போய் இருந்தார். இந் நேரத்தில் ஆழமான பொருள் பகர வேண்டிய பாடல் ஒன்று குறுக்கிட்டது. அப்பாடலுக்கு விரிந்த கருத்துரை பகராது மேலெழுந்த வாரியாகப் பொருள் படுத்திக் கொண்டு போனார் பிரசங்கியார். இவ்வாறு பிரசங்கியார் படுத்திய பொருள் சிந்துக் களஞ்சியப் புலவர் மனத்திற்குப் பிடிக்கவில்லை. புலவர் உடனே பிரசங்கியாரிடம், இந்தப் பாடலுக்கு இன்னொரு முறை பொருள் படுத்துங்கள் என்று கூறினார். பிரசங்கியார் சிந்துக் களஞ்சியப் புலவரை ஏற இறங்கப் பார்த்து விட்டு மீண்டும் முன் போலவே பொருள் கூறி முடித்தார். அதற்கு நம் புலவர் நீங்கள் கூறிய பொருள் சேக்கிழார் கருத்தைத் துலக்கப் படுத்தவில்லை என்று கூறிவிட்டார். கூட்டத்தில் அமைதி குலைந்தது. அங்கிருந்தவர்களில் சிலர் நம் புலவரைச் சீறிப் பாய்வது போலக் காட்சி கொடுத்தனர்.

பிரசங்கியார் நம் புலவரை விளித்து 'என்னுங்காணும் துலுக்கரே' என்று வெகுண்டு வினவினார். அதற்கு நம் புலவர், ஆம். எங்கள் பரம்பரை துருக்கிகள்தாம் என்று பதிலிறுத்தார். பின் பிரசங்கியார் ஓய், நான் செந்தூரரான் என்று உமக்குத் தெரியுமா? என வீறுடன் ஒரு கேள்வியைப் போட்டார். நம் புலவர் அதற்கு நீர், எந்த ஊராய்த்தான் இருந்தால் என்ன? என்றவர் கீழ்க்காணும் வெண்பாவை அக்கணமே பாடிக் காட்டினார். அது,

"கச்சை இறுக்கிக் கழுத்தில் மணிபூண்டு
வச்ரவேல் ஏந்தி வரினும்நீர்—பச்சைமயில்
வள்ளித்தெய் வானையொடு வந்திருக்கக் காணேனே
பிள்ளைசெந் தூரானென் றல்"

என்பதேயாம்.

இடையில் கச்சை யணிந்து கழுத்தில் மணி பூண்டு ஒளி பிறங்கும் வேலையொத்த ஊற்றுக் கோல் ஏந்தித்தானே வந்திருக்கிறீர்! இத்துடன் பச்சைமயில் மீது வள்ளித் தெய்வானை நடுவிலே வந்திருந்தாலன்றோ உங்களைச் செந்தூர் முருகன் என்று ஒப்புக் கொள்ளலா மென்பது இந்தப் பாடலின் பொருள்.

வெண்பாவைப் படிக்கக் கேட்ட பிரசங்கியார், புலவரே! நீர் என்மீது பொருத வந்தப் படபடப்பிலே பாடலின் சீரைப் பிழைத்து விட்டீரே! என்று திருப்பினர். அதற்குச் சீர் பிழையாதே என்றார் புலவர். ''பச்சைமயில்'' என்னும் தனிச் சொல்லை நீர் கவனித்தீரா? அச்சீர் தேமாங்கனியாய் வெண்பாச்சீர் பிழைத்திருக்கிறது உமக்கு விளங்கவில்லையோ என்று கேட்டார் பிரசங்கியார். புலவர் அதைக் கேட்கிறீர்களா? அதைக் கூவிளங்காயாக மாற்றிக் கொள்ள வேண்டியதுதானே என்று புன் முறுவலோடு புகன்றார். பிரசங்கியார் என்னே நீர் சொல்கிறீர்! வெண் பாவிலே எக்காரணம் பற்றியும் இடம்பெறாத கனிச்சீர் எப்படிக் காய்ச்சீராகும்? உமது வெண்பாவே சீர் பிழைத்து விட்டது என்று உரக்கக் கூவினர். அப்பொழுது நம் புலவர் கனிச்சீர் காய்ச்சீராவதற்கு விதி கூறுகிறேன் என்று கீழ்க்காணும் யாப்புச் சட்டத்தை எடுத்து விளக்கினர். அது,

''சொல்லாறும் வல்லின மெல்லின மோடிடையொற்றுதோன்றில்
நில்லாறும் நேர்நேர் நிரைவருகில் அந்நேர் நிரையினைக்
கல்லாத மாந்தர்கள் தேமாங் கனியென்பார் கற்றுணர்ந்த
நல்லோ ரஃதினைக் கூவிளங்கா யென்று நாட்டுவரே''

இந்தப் பாடலைப் படிக்கக் கேட்ட பிரசங்கியார் இப் பாடல் யாப்பிலக்கண விதிகளுக்கே நேர் மாற்றம். ஆகவே

நான் இதை ஒத்துக்கொள்ள முடியாது என்று மறுத்தவர், நீர் கூறுகிறபடி வழக்குகள் இருந்தால் "புகழேந்தி நள வெண்பா", "முத்தொள்ளாயிரம்" ஆகிய வெண்பாக்களில் ஆதாரம் காட்டும் என்று கூறினர்.

அதற்கு நம் புலவர் நளவெண்பாவிலே அந்திமாலை வருணனையில் காணப்படும்,

"மல்லிகையே வெண்சங்கா வண்டூத வான்கருப்பு
வில்லி கணைதெரிந்து மெய்காப்ப—முல்லையெனும்
மென்மாலை தோளசைய மெல்ல நடந்ததே
புன்மாலை யந்திப் பொழுது" (நளவெண்பா: 99)

என்ற வெண்பாவில் வரூஉம் "முல்லையெனும்" என்ற தனிச் சொல்லிற்கு அசையைப் பிரித்துப் பாருங்கள் என்று கூறினர். பிரசங்கியார் அப்படியே அசைகளைப் பிரித்துப் பார்த்து ஆச் சரியப்பட்டுப் போனவர், நீர் மகா வல்லவர் காணும்! இப்படி வெண்பாச் சட்டம் ஒன்றிருக்கிறதை நான் இன்றுதான் உம் வாயிலாகத் தெரிகிறேன் என்று நம் புலவர்க்குப் புகழ் மாலை சூட்டிவிட்டு, நம் புலவரின் பிறப்பு வளர்ப்பு ஊர் உறவினர் களைப் பற்றி வரலாறு தெரியப் பிரியங் கொண்டுவிட்டார்.

அதற்கு நம் புலவர் கூறிய விடையிலிருந்தும் மன மகிழ்ந்து போன பிரசங்கியார் நீங்கள் வாழ்கிற ஊர் மிகச் சிறு ஊரேயாயினும் அது கலைப் பெருங் கடலை ஆடையாக உடுத்தியுள்ளது என்று புகழ்ந்தவர் நான் பொருள் படுத் தியப் பெரிய புராணப் பாடலுக்கு உரை துலக்கமில்லை என் றீர்களே ஆகையால் அப்பாடலிலுள்ள தங்கள் கருத்தைக் கூறுங்கள் என்று வேண்டிக் கொண்டார். அப்பாடல் கீழே தரப்படுகிறது. அது,

**"வளவநின் புதல்வன் ஆங்கோர் மணிநெடும் தேர்மேலேறி
அளகில்தேர் தானைசூழ ஆரசுலாம் தெருவில் போங்கால்**

இளைய ஆன்கன்று தேர்க்கால் இடைப்புகுந் திறந்த தென்னத்
தளவுறும் இத்தாய் வந்து விளைத்ததித் தன்மை யென்றான் ''

என்பதே. இந்தப் பாடலுக்குச் செந்தூர்ப் பிள்ளை கூறிய விளக்கங்களாவன. ஏ! சோழ மன்னனே! உன் மகன் இன்று அரசவீதியில் தேர் நடத்திக் கொண்டு போனான். அவன் நடத்திச் சென்ற தேர்க்கு உதவியாக ஒரு தேர்ப் படையும் சூழ்ந்து சென்றது. அப்பொழுது எங்கோ இருந்து தன் தாயோடு இணைந்து வந்த இளங்கன்று ஒன்று உன் மகன் நடத்திக் கொண்டுபோன தேர்க்காலில் அடிபட்டு இறந்து போயிற்று. இதனால் தளர்வுற்றுப் போன தாய்ப்பசு நிகழ்ச்சியை உன்னிடம் தெரிவித்து நியாயம் கிடைக்கவேண்டுமென்ற நோக்கத்திலே தன் கொம்புகளால் மோதி ஆராய்ச்சிமணியை அடித்துவிட்டது என்றதோடு வேறு நிகழ்ச்சிகளிலே தன் உரையை விரித்துக் கொண்டு போய்விட்டார்.

இந்தப் பாடலில் காணும் கொலைக்குற்றம் உன் மகனைச் சார்ந்ததன்று. அது கன்றுக் குட்டியின் தற்காப்பாற்ற தன்மையில் தானே தனக்குக் கொலையைத் தேடிக்கொண்டது என விளக்கம் தருகிற சேக்கிழார் கருத்துத் துலக்கமாக வில்லை என்பதுதான் சிந்துக் களஞ்சியப் புலவர் கேள்வியாகக்கூடும்.

பின் இப்பாடலுக்குச் சிந்துக் களஞ்சியப் புலவர் கூறிய விளக்கங்களாவன:

அங்கு வளவன் மகன் நடத்திக் கொண்டு போன தேரை நெடுந்தேர் என்று குறிப்பிடுகிறார் கவிஞர். அத்துடன் அத்தேர்க்கு அணியாக மணிகள் அணிந்திருந்தன என்பதையும் இணைத்து மணி நெடுந்தேர் என்று விளக்கம் தரப்பட்டிருக்கிறது. இதனால் உயரமான தேரை நடத்துகிற

பாகனுக்கு அடித்தலத்தின் நிகழ்ச்சிகள் தெளிவாகப் புலப் படாவென்பது கருத்து. இத்துடன் அத்தேர் ஊர்கிறபோது மணியோசைகள் விடாது முழக்கமிட்டுக் கொண்டிருக்கின் றன. இம் முழக்கம் தேர் ஊர்கிறது என்பதை அங்கு நட மாட்டம் பண்ணுகிற உயிரினங்களுக்கு அறிவிப்புச் செய்கிற தாய் இருக்கிறது. இத்துடன் அந்த அரசன் மகன் நடத் திச் சென்ற நெடுந்தேரைச் சுற்றிலும் அரண் செய்வதான அளகில் தேர் என்னும் ஒரு தேர்ச் சேனைத் தளமும் அணித் துப் போகிற தென்பதையும் பாடல் விளக்கப் படுத்துகிறது. இதெல்லாம் போதாமல் அத்தேர்ப் படையனைத்தும் தான் வழக்கமாக ஊர்ந்து செல்கிற அரச வீதியில் சென்றது என் பதையும் விளக்கி விடுகிருர் கவிஞர். இவைகளிலிருந்து அங்குச் சோழன் மகன் தான் தேர் நடத்திச் சென்றதில் நிகழ்ந்துள்ள கொலைக் குற்றத்திற்கு எவ்வகைத்தும் அவன் பொறுப்பில்லை என்பதையே விளக்குகின்றன.

எப்படி எனில்? அன்று சோழன் மகன் தேர் நடத்திச் சென்றவிடம் ஆடுமாடுகள் மேய்கின்ற புறம்போக்கு எல்கை யன்று. அவன் வழக்கம் போல் நடத்துகிற அரச வீதி யிலே நடத்திச் சென்றிருக்கிருன். அவன் அன்று உயர்ந்த தேரினை நடத்திச் சென்ருனதலால் அடித்தல நிகழ்ச்சிகளை அவனுல் அறிய முடியாது போயிற்று. எனினும் தேர் ஊர் கிறபோது அதனது மணியோசைகள் இடைவிடாது முழக்க மிடுவதிலிருந்தும் ஆடு மாடு மற்ற உயிர்கள் விலகிக் கொள் வதற்குப் போதிய அறிவிப்புச் செய்யப்பட்டிருக்கிறது. இது போதாதென்ருல் அன்று அரசன் மகன் நடத்திய தேரைச் சுற்றி அரண் செய்வதாக ஒரு பெரிய தேர்ப்படையும் சூழ்ந்து செல்கிறது. இங்குச் சுற்றிச் செல்லும் தேர்த்தடுப் பைக் கடந்து, மணியோசை கேட்டு விலகாமல் அந்தக் கன்று அரசன் மகன் நடத்திய தேர்க்காலில் சிக்கி அடி பட்டு இறந்ததற்குத் தேர் நடத்தியவன் பழியாகமாட்டான்

என்பதே—சேக்கிழார் தருகிற விளக்கம் என்று அழகு பெறப் பொருள் பகர்ந்தார்.

இங்குப் புலவர் புகன்ற விளக்கவுரை அங்கு வீற்றிருந்தவர்கள் உள்ளங்களை வெகுவாகத் தொட்டு இழுத்துவிட்டதால் அவர்கள் அந்தப் பொருளின்பத்திலே தங்கள் புலன்களைத் தோய்த்துப் பூரிப்பில் மூழ்கி விட்டார்கள். இன்னும் சொன்னால் செந்தூர்ப் பிள்ளையுமே சிந்துக் களஞ்சியப் புலவர் பொருள் கேட்டுச் செம்மாந்து போய்விட்டார். பின் அங்கிருந்த பெரிய மனிதர்கள் சிலர் நம் புலவரை விளித்து ஐயா! நீங்கள் இன்னும் தொடர்ந்து சில பாடல்களுக்குப் பொருள் பகருங்களேன் என்று வேண்ட முன்வந்தனர்.

சிந்துக் களஞ்சியப் புலவர் இந்தச் செந்தூர்ப் பிள்ளை மிக்கத் திறம்படைத்தவர். இவர் இதற்கு முன் பகர்ந்து வந்த பொருளின்பத்திலே நானுமே திளைத்துப் போனேன். இங்கு மட்டும் கருத்தை விளக்காமல் விட்டு விட்டதன் காரணமாகவே நான் தலையிட்டுக் கொண்டேன். மேலும் அவரே பொருள் பகரட்டும் என்று செந்தூர் பிள்ளைக்குப் புகழிடம் கொடுத்துவிட்டுத்தான் மெல்லென விலகிக் கொண்டாராதலால் பின் செந்தூர்ப் பிள்ளையே முன் போலப் பொருள் பகர்ந்து வந்தார்.

அன்று இரவு இரண்டு மணிக்குத்தான் உரை விளக்கம் முடிந்தது. முடிவிலே செந்தூர்ப் பிள்ளை நம் புலவரைப் பற்றிப் புகழாகக் கீழ்க்காணும் வெண்பா ஒன்றைப் பாடி அதற்குப் பெரியதோர் விளக்கமும் பண்ணினர். அது,

**"கற்றுத் தெளிந்த கலைவாணர் நாப்பண்**
**முற்றும் தெளிந்த முனிவர்போல்—உற்ற**
**வளஞ்சேர் பனைக்குளத்து மாதவத்தான் சிந்துக்**
**களஞ்சியத்தைக் கண்டதுவென் கண்"**

என்பதே.

———

பனைக்குளம் அட்டாவதானம்

## 4. அபுபக்கர் நயினார்ப் புலவர்

பனைக்குளம் அட்டாவதானம் அபுபக்கர் நயினார்ப் புலவர் முன்கண்ட சிந்துக் களஞ்சியப் புலவரின் குமாரர். அபுபக்கர் நயினார் புலவர் கல்விகற்கும் பருவம் எய்துதற்கு முன் அவர் தந்தை சிந்துக் களஞ்சியப் புலவர் இறைவன் திருவடி யெய்திவிட்டார். மிக இளம் வயதில் தன்னை ஆதரிப்பாரில்லாது பல அவதைக்கு உள்ளான அபுபக்கர் நயினார்ப் புலவர் நினைவு தோன்றும் பருவத்தில் கல்விகற்க முன் வந்தார். அப்பொழுது உள்ளூரிலே எழுத்தறிவு கூடக் கற்பித்து வைக்க ஆசிரியரில்லாமையால் மேலூரிலிருக்கும் தங்கள் இனத்தாரிடம் சென்று கல்வி பயின்று வந்தார்.

" தந்தையொடு கல்விபோம் " என்ற ஒளவை மூதாட்டியார் வாக்கும் அப்பாற்பட, அவர் கல்வி கற்குங்கால் "கல்லாது பாதி குல விருது " என்னும் பழமொழிக் கேற்ப சில ஆண்டுகளிலேயே பெரிய இலக்கண இலக்கிய மேதையாய் வெளி வந்தவர் தனது நாற்பதாவது வயதிலே அவதானம் பண்ணும் அற்புத மனிதராகவும் காட்சியளித்தார்.

இதன் பயன் அக்காலத்திலிருந்த கலைப் பெரும் சான்றோர்களது உள்ளங்களை எளிதில் இவர் தொடுவதற்கு இடமாய் இருந்தது. இவரது கலைப் புகழ் நம் தமிழகத்தில் ஒளிவீசியதோடு இலங்கை, பர்மா, மலாயா முதலிய பிற நாடுகளிலும் ஒளி விசித் திகழ்வதாய் இருந்தது.

தம் உறவினரும் ஊரவரும் அங்கங்கே வாழ்ந்து வந்தார்களாதலால் புலவர் பெரியார்க்குச் சென்றவிட மெல்லாம் சிறப்பும் வளர்ந்தேறி வந்தது. தமிழகத்திலே அவர் காலத்திலிருந்த மகாவித்வான்களான நாகூர் குலாம் காதிறு நாவலர் இராமநாதபுரம் அரசவைப் பெரும் புலவர் ரா. இராகவையங்கார், யாழ்ப்பாண வித்வான்களான நா. கதிரைவேற்பிள்ளை, ஆறுமுக நாவலர் மருமகன் பொன்னம்பலம் பிள்ளை ஆகியவர்கள் உள்ளக் கமலங்களில் இவர் பிள்ளை அன்னம் போல இடம் பெறவும் வாய்த்தது.

அக்காலை நம் இஸ்லாமியப் பெருமக்களும் ஏனைய தமிழ்ப்பற்றுடைய பெருந்தகையார்களும் இவரைத் தங்கள் ஊர்களுக்கு அழைத்து அவதானங்கள் புரியச் செய்து அக மகிழ முன் வந்தனர். இதனுல் இவர்க்கு அறிமுகப்பட்ட அன்பர்கள் பலர் வணிகத்துறையிலே யாழ்ப்பாணத்திலிருந்தார்களாதலால் அவர்கள் நம் புலவரை யொருமுறை யாழ்ப்பாணம் வந்து போகுமாறு வேண்டுதல் விடுத்தனர். புலவரும் அதற்கிணங்கி யாழ்ப்பாணம் போவதற்கு முடிவு செய்தார். அந்தக் காலத்திலே தமிழகத்திற்கும் இலங்கைக்கும் புகை வண்டித் தொடர் ஏற்பட்டில்லையாதலால் புலவர் தூத்துக்குடி சென்று பாய்க்கப்பலேறிப் போவதெனும் முடிவுக்கு வந்தார்.

புலவர் பயணமான கப்பலுக்கு நண்பகலில் பாய் தூக்கப்பட்டது. அப்பொழுது முதுவேனில் காலமாதலால் கடலணங்கு காற்றினெடு பொருந்தாது கண்ணயர்ந்து போய்க்கிடந்தாள். இன்னும் அவளது கருநீல மேனி எங்கும் கதிர்க்கனல்பட்டுக் கருகித் தீய்ந்துவிட்டதால் தண்மை மாறுபட்டு வெம்மை கொப்பளித்துக் கொண்டிருந்தது.

கண்பார்வைக்குக் கரைமறைந்ததும் பண்டி நிறைய உண்டி கொண்டிருந்த மலைப்பாம்பு நெளிவது போல மெல்

லத் தன் அலைக்கரங்களை அசைக்கலானாள் கடல் மடந்தை. அப்பொழுதவள் கருநிற மேனியிலே சிறு எறும்பு ஊர்வது போல் ஓடிக்கொண்டிருந்தது மரக்கலம்.

காலக்கருவி இழைந்து கொண்டிருக்கையில் வெய்ய வன் பார்வையும் பையப் பைய குறைந்து கொண்டு போனது. அந்திமாலை முந்திக்கொண்டு வருகையில் கப்பல் மேல்தட்டிலிருந்தவர்கள் கீழே இறங்கிக் கொண்டும் கீழே இருந்தவர்கள் மேலேயேறிக் கொண்டும் அமர்க்களம் பண்ணிக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது அபுபக்கர் நயினார்ப் புலவர் மேல்தட்டிலுள்ள தம் படுக்கையில் சாய்ந்து கொண்டிருந்தவாறு கையிலிருந்த புத்தகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

பயணிகள் பண்ணிக்கொண்டிருந்த நெருக்கடியிலே மனம் வெறுப்புப்பட்டு ஆகாயத்தையும் கடலையும் உற்று நோக்கிக் கொண்டிருந்த யாழ்ப்பாணத்துப் பிள்ளையொரு வர் கண் பார்வை புத்தகம் படித்துக் கொண்டிருக்கிற புலவர் மீது ஊடுருவிப் பாய்ந்தது.

அங்குப் புலவர் பார்த்துக் கொண்டிருந்த நூல் நன்னூ லிலக்கணம். இதையறிந்து கொண்ட பிள்ளையவர்கள் இவர் ஒரு தமிழ்ப் புலவராய் இருக்கக்கூடும் என்று எண்ணினரா யினும் அதில் ஐய முற்றவராய்ப் புலவரை விளித்துப் பெரிய வரே! நீங்கள் என்ன புத்தகம் பார்க்கிறீர்கள் என்று வினவி னார்.

புலவர் இஃதொரு இலக்கணப் புத்தகம் என்று விடை பகர்கிறபோது அதற்குச் சற்று விளக்கம் கூறுங்களேன் நான் கேட்கப் பிரியப் படுகிறேன் என்றார் பிள்ளை. புலவர் அதற்கு உங்களுக்கு இலக்கணம் தெரிந்தால்தான் இது விளங்கக்கூடும் என்று பதில் கூறினார். பிள்ளை தெரிந்தவர்

களிடம்தானே தெரியாதவர்கள் கேட்டுக் கொள்ள வேண்டு மென்று மேலும் வார்த்தைகள் பேசியது புலவரது ஆராய்ச்சிப் போக்கிற்கு இடையூறாய் இருந்ததால் அவர் சிறிது வெகுண்ட தன்மையில் என்னென்னவோ வழவழ வென்று பேசுகிறீர்! தெரியாதவர்கள் தெரிந்து கொள்வ தற்குப் பள்ளிக்கூட மல்லவா போகவேண்டுமென்று கூறி விட்டார்.

அப்பொழுது நம் புலவர் சிந்தனையில் ஆழ்ந்திருந்தது நன்னூலிலுள்ள "இடுகுறிக் காரண மரபோடாக்கம்" என்னும் சொல்லிலக்கணச் சூத்திரம். இதை உணர்ந்து கொண்ட பிள்ளை புலவர் தம்மை வெகுண்டுரைத்ததையும் பொருட் படுத்தாதவராய்த் தயவு செய்யுங்கள் என்று கூறிக் கொண்டே இடுகுறிக்காரணம் பொது இவைகளுக்கு விளக் கம் கூறுங்கள் என வேண்டத் துவங்கினார்.

பிறகுதான் புலவர் இந்தப் பிள்ளையும் இலக்கணம் தெரிந்தவராகவே இருக்கிறார் என்று விளங்கிக் கொண்டவர், அவர் கேள்விக்குத் தக்கதான விடைகளைப் பகர்ந்து வந்தார். இவ் விடைகளில் சிலவற்றைப் பிள்ளை மறுக்கவும், புலவர் எதிர்க்கவும் ஏற்பட்டு விட்டதால் வாதம் நீடித்துக் கொண்டு போனது. என்றாலும் நிகழ்ச்சிகள் கேட்போர் யார்க்கும் சுவை மிக்கதான அறிவு விருந்தாய் இருந்ததால் மக்கள் வாதம் கேட்டு மகிழ்வதில் மனம் கொண்டு விட்டார்கள்.

வர வரப் புலவர்க்கும் பிள்ளைக்கும் தருக்கம் ஒழிந்த தாயில்லை. அருக்கன் தான் ஒளிவது போலக் குடதிசையில் போய் மறைந்து விட்டான். மாலை மயங்கிய போது செக்கர் வானம் சிங்காரித்துக் கொண்டிருந்தது. கப்பலி லிருந்த யாவரும் இரவு உண்டி கொள்ளப் பிரிந்து போய் விட்டார்கள்.

அன்றிரவு புலவர் வாயிலிருந்தும் புராண விளக்கம் கேட்க வேண்டுமென்று எண்ணினர் பலர். அப்பொழுது நிலாத்தோற்று வேளையாய் இருந்ததால் வான முகட்டிலிருந்து வெள்ளியை உருக்கி ஊற்றுவதுபோல் வெண்சுடர் மதியம் தண்கதிர் விரிக்கையில் பால் பானையில் மிதக்கிற ஈயைப்போல அலைந்து கொண்டு போனது அவர்கள் ஏறிச் சென்ற மரக்கலம்.

இரவு எட்டு மணியானது. கப்பலிலுள்ளவர்கள் விருப்பத்திற்கு இணங்கி புராண விளக்கம் பண்ண ஒப்புக் கொண்டார் புலவர். அந்தக் கப்பலிலே பெரும்பான்மையோர் முஸ்லிம்களாய் இருந்தார்களாதலால் அவர்கள் தங்கள் சிருப் புராணத்தைப் பொருள் படுத்துமாறு வேண்டிக் கொண்டார்கள். பலர் புலவரைப் பார்த்துக் கடவுள் வாழ்த்துப் படித்து முடிந்தவுடன் நபி அவதாரப் படலத்தைப் படிக்கும்படி கூறினர். அப்பொழுது பிள்ளை அவர்களும் புலவருக்கு எதிரே வந்து அமர்ந்து கொண்டார்.

முதல் இரண்டு பாடல் பொருள் படுத்தப்பட்டு மூன்ருவது பாடல் பொருளுக்கு வந்தது. அது,

"விண்தொடு கொடுமுடி மேருவிறு அழித்து
எண்திசை கிரியொடும் இகலும் கொங்கையர்
கொண்டமா மயலொடு மனமும் கூர்விழி
வண்டுஒடு வண்டு உறைமாலை மார்பினுர்"

என்பதே.

புலவர் இந்தப் பாடலுக்குப் பொருள் கூறிக் கொண்டு வருகிறபோது பாடலில் காணும் "கூர்விழி" என்னும் பாடத்திற்கு நைடதத்திலிருந்து ஒரு மேற்கோள் கூறினுர். அது,

"குமிழ்மிசை மறிந்து குழையெதிர் நடந்து
கொலைத் தொழில் மறலியைப் பயிற்றி"

என்பதே.

இதில் பாட்டுடைத் தலைவியின் கண்ணானது உயிர்பறிக்கின்ற கூற்றுவனுக்கும் படிப்பினையைக் கற்றுக் கொடுக்கிறதெனப் பொருள் பகர்கிறபோது பாடலில் கொண்டிருக்கும் இரண்டாம் வேற்றுமையை விட்டு விட்டு நான்காம் வேற்றுமையைப் பயன் படுத்தினார். இதையறிந்த பிள்ளை இப்பாடலில் நீங்கள் பிற வேற்றுமை கொள்ளக் காரணமென்னவென கேள்வி கேட்டார். அதற்குப் புலவர் தன் வேற்றுமை மயங்குமாயின் பிற வேற்றுமை கொள்ளலாமன்றோ? என அதற்கு ஆதாரமாக,

" யாத னுருபிற் கூறிற் றாயினும்
பொருள்சென் மருங்கில் வேற்றுமை சாரும் "

என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தை விளக்கிக் காட்டினார். அதற்குப் பிள்ளை இவ் வேற்றுமை ஆகு பெயரைக் கர்த்தாப் பொருளோடு இணைத்து வைப்பது ஆதலால் இங்கு இச் சூத்திர மரபு முக்கியமன்று என்றார். எனினும் புலவர் அச் சொல்லை ஏற்றுக் கொள்ளாதவராய் நான் கூறியது சரியே என்றார். இதில் பிள்ளை மேலும் தன் வாதத்தைத் தொடரவில்லை. அப்பால் கீழ்க்காணும் பாடல் பொருளுக்கு வந்தது. அது,

" கொல்நுனை வெண்ணிறக் கோட்டு வாரணச்
செந்நிறக் குருதியில் திமிர்ந்து வாய்கழீஇ
மின்அவிர் கண்மணி விளங்கு மாமுடி
ஒன்னலர் உயிரைமேய்ந் துறங்கும் வேலினர் "

என்பதே. இந்தப் பாடலை நம் புலவர் பொருள் படுத்தி முடிந்தவுடன் அதில் காணும் " செந்நிறக் குருதி, " " வாய் கழுவி ", " உறங்கும் வேல் " என்னும் பாடங்களுக்கு நல்ல விளக்கம் தரவேண்டுமென்று கேட்டார் பிள்ளை.

இதில் பிள்ளை அவர்கள் குறிப்பாகக் கேட்டுக் கொண்டது, குருதி இயற்கையிலேயே செந்நிறம் உடைய தாய் இருக்கையில் அதற்கு வலிந்து அடை கொடுத்திருக்கும் பெற்றியாது என்பதே.

புலவர், நீங்கள் கேட்கிறது ஆச்சரியமாய் இருக்கிறது; "செம்பொத்த குருதி தேக்கி உடலையும் தின்பென் என்ருன்" என்பது கம்பர் தமது இரணியன் வதைப் படலம் விளக்குவதாகும், என்றவர் மேலும் அவைகளுக்குப் பெரு விளக்கம் பண்ண ஆரம்பித்தார்.

உயிருடம்புகள் குருதி மாறுபாட்டினுல் வலிமையற்றுப் போகின்றமை கண்கூடு. பொதுவாக உயிருடம்புகளது இயல்புகளை மூன்று வகையாகப் பிரிக்கலாம். அதில் முதலாவது காளைப் பருவம், இரண்டாவது நோய்வாய்ப் பட்டுத் தளர்ந்த பருவம். மூன்ருவது முதுமைப் பருவம். இவைகளில் முதலாவது பருவம் நீங்க, இரண்டு மூன்று பருவத்தினது குருதிகள் இயற்கைச் செந்நிறம் மாறுபட்டுப் போவது வெளிப்படை.

நோய்வாய்ப்பட்ட உயிரினது குருதி, கறுப்புற்றுக் கட்டியாகவும் வேறுவிதமாகவும் திரிவதுண்டு. முதுமையினது குருதி நீர்ப் பிரிவுக்குட்பட்டு வெளுப்புற்றிருப்பது இயல்பு. ஆகவே இவ்விரு திற உயிர்களும் வீர உணர்வு தளர்ந்திடுதலை அடைகின்றன.

இதனுல் இங்கெடுத்துக் கொள்ள உரித்தானது காளைப் பருவம் ஒன்றே. இதில் போர்க்களத்தில் பொருதுகிற சுத்த வீரர்கள் தங்களைப் போன்ற சுத்த வீர உயிர்களுடனேயே பொருத முற்படுகிருர்களாதலால் இங்குச் சுத்த வீரத் தன்மையை நிலை நாட்டுவதற்குச் சுத்த வீர உடம்பினைக் குறிப்

புப் பொருளாகக் கொண்டு அடை கொடுத்துள்ளார் கவிஞர்.

ஆகவே, எம்பெருமானரின் தாதையாகிய அப்துல் லாவின் வேலாயுதமானது பசி கொண்டுவிடுமானல் அது உண்டி கொள்வதற்குமுன் நோய்வாய்ப் பட்டிராததும் முதுமை பெற்றிராததுமான காளைப் பருவமுடைய யானை யினது செந்நிறக் குருதியில் வாயைக் கழுவிக் கொள்கிறது என்று கூறினர். வாய் கழுவிக் கொள்கிறது என்ற பாடல் மக்கள் இக்காலத்திலும் உண்டி கொள்ளுங்கால் முதலில் வாயைக் கழுவிக் கொள்கிறதை நாம் பார்க்கின்றேம்.

இனிமேல் நாம் தெரிய வேண்டி இருக்கிறது, உறங்கும் வேல் என்னும் பாடமே. இங்கு உயிருடைப் பொருள்களை இரு திறமாகப் பிரிக்கலாம். ஒன்று ஆண்டவனல் படைக் கப்பட்ட இயற்கை உயிர். மற்றென்று மனிதர்களால் படைக்கப்பட்ட செயற்கை உயிர்.

இவ்விருதிற உயிர்களும் அஃததன் உடல் உழைய உழைக்குமானல் சற்று அலுப்புத் தீர்த்துக் கொள்ள விரும்பு வது இயல்பு. அங்ஙனம் அலுப்புத் தீர்க்க விழைகிறபோது ஆண்டவனல் படைக்கப்பட்ட உயிர்கள் பரந்த வெளியல் லாது ஓர் அடக்கமான இடத்தையே அவைகள் விரும்பி நிற்பது கண்கூடு. இப்படி வழக்கினை மேற்கொண்டே இங்கு அப்துல்லாவின் வேற்படையும் ஆண்டவனல் படைக்கப்பட்ட உயிர்களைப் போன்று பரப்புற்ற வெளி களில்லாது அடக்க மென்னும் அதன் உறையினுள் புகுந்து உறங்குகின்றதென்றும் அஃது அடுத்தடுத்துத் தம் எதிரிக ளோடு பொருத முற்பட்டதே உடலலுப்புக்குக் காரண மென்றும் கூறினர்.

புலவர் பெருந்தகை இவ்வாறு பிள்ளை கேட்ட கேள்வி களுக்கு அழகுசால் பொருள்கூறி அவையகத் தோரை

ஆனந்த வெள்ளத்திலே மிதக்க வைத்த பொழுது அந்தப் பொருள் வெள்ளம் நம் பிள்ளை அவர்களையும் அடித்துக் கொண்டு போகாமலில்லை. இந்நிலையிலும் பிள்ளையவர்கள் நம் புலவரது வாயைக் கிளறிவிட்டு வண்டமிழ் சுவைக்க வேண்டுமென்ற எண்ணத்தை மாற்றிக் கொள்ளவில்லை போலும். நீங்கள் பொருளுரை புகல்கிறபோது பாட்டுடைத் தலைவரின் வேற்படை மணிமுடிதரித்த எதிரரசர் உயிரினை உண்டதாகக் கூறினீர்களே, வேற்படைக்கு உண்டு உடல் பூரிக்கும் தன்மை உண்டா என மறு கேள்வியைப் போட்டார்.

அதற்கு, புலவர் வேற்படைக்கு உண்டு உடல் பூரிக்கும் தன்மை இல்லையாயினும் மரபு உண்டுமென்பதை விளக்கு வான் வேண்டி,

> "உண்டற்குரிய அல்லாப் பொருளை
> உண்டன போலக் கூறலு மரபே"

என்னும் தொல்காப்பிய இலக்கணம் கூறி அதற்கும் மேற் கோளாகத் திருக்குறளிலிருந்து ஒரு விளக்கம் காட்டினார். அது "கண்ணும் கொளச்சேறி நெஞ்சே இவை யென்னைத் தின்னும் அவர்காணல் உற்று" என்பதாம்.

இது தலைவனைப் பிரிந்திருக்கிற தலைவி, தனது நெஞ் சொடு கிளத்துகிறபோது 'மனமே நீ தலைவரிடத்துச் செல் வாயானால் இக்கண்களையும் கூட அழைத்துக் கொண்டுபோ. இல்லாமல் நீ மட்டும் போவாயானால் இக்கண்கள் அவரைக் காண்பதற்காக நீ என்னை அழைத்துக் கொண்டு போய்க் காட்டு; இல்லையேல் நான் உன்னைத் தின்பேன் என்று மிரட்டுகின்றன' எனக் கூறுகிறாள். இதனால் அவள் கண்ணினது காதல் பசி அவளையே இரையாகக் கொள்கிற தென்பதே. இதில் கட்புலன் மெய்ப் புலனையோ வேறு

புலவனையோ தின்ன இயலாதாயினும் நிகழ்ச்சி தின்னும் தன்மையதாய் உள்ளதென்பதே.

இப்படியேதான் மேலே காட்டிய அப்துல்லா அவர்களின் வேலாயுதமும் உண்டு உடல் பூரிக்கும் தன்மை யற்றதே யாயினும், அது புரியும் அடு தொழிலானது உண்டதற்கு ஒப்பாகும் என்று விளக்கம் கொடுத்தார்.

அன்றிரவு எட்டு மணிக்கு ஆரம்பிக்கப்பட்ட புராண விளக்கம் நள்ளிரவு பன்னிரண்டு மணியைக் கடந்து விட்டது. அத்துடன் மக்களின் உறக்கத்தை முன்னிட்டுப் பிரசங்கத்தை முடித்துக் கொண்டார் புலவர். இதனிடையில் நான்கு பாடல்கள்தாம் பொருள்படுத்தப்பட்டன. அங்கிருந்தவர்களும் உரை இன்பப் பெருக்கிலே உள்ளம் ஊறிப்போனார்களாதலால் நேரம் போனது அவர்களுக்கும் தோற்றவில்லை. பொழுது விடிந்து கொண்டிருக்கிற போது அவர்கள் மரக்கலம் யாழ்ப்பாணத்துக் கலங்கரையை அடைந்துவிட்டது.

பயணிகள் யாவரும் கரையில் இறங்குகின்றபோது கப்பல் துறையில் வரவேற்புக்கெனப் பலர் காத்திருந்தனர். இவர்களில் முஸ்லிம்கள் ஒரு குழுவாகவும் சைவர்கள் ஒரு குழுவாகவும் காணப்பட்டனர். முஸ்லிம்கள் நம் அபுபக்கர் நயினார்ப் புலவரை வரவேற்புச் செய்கிற பொழுது சைவர்கள் பிள்ளை அவர்களை வரவேற்புச் செய்தார்கள். இதனிடையில் பிள்ளை அவர்களைப்பற்றி யார் என்று தெரிவதற்கு வாய்ப்புப் பெருமலிருந்த நம் புலவர் அப்பொழுதே அங்குக் கரையில் இருந்தவர்களிடம் வினவியறியலானார். அவர்கள் இவர்தான் மேலைப்புலோலி மகா வித்வான் நா. கதிரைவேற் பிள்ளை என்ற முழு விவரங்களையும் எடுத்துக் கூறினார்கள்.

இவ்வார்த்தையைக் கேட்டதும் நம் புலவர் சிறிது நேரம் மலைப்பில் ஆழ்ந்துபோனார். இவரைக் கப்பலில் நாம் யார்

என்று வினவியதற்குக்கூட இவர் நல்ல விளக்கம் கொடுக்காமல் ஏமாற்றி விட்டார். மேலும் மேலும் இவர்க்கும் நமக்கும் போராட்டமே வளர்ந்துகொண்டு போய் விட்டதால் அதைப்பற்றி அவரிடம் ஏதும் அழுத்தம் பண்ணிக் கொள்ள முடியாது போனது. நாம் அவரிடம் இரண்டொரு கடிந்த மொழி வேறு கூறிவிட்டோமே என நம் புலவருக்குச் சற்றுச் சிந்தனை வெள்ளம் பெருக்கெடுத்தோடியது.

கதிர்வேற் பிள்ளையைப் பற்றி ஏற்கெனவே நன்கு கேள்விப் பட்டுள்ளார் நம் புலவர். இப்பிள்ளை சிறந்த தமிழறிஞராவார். எனினும் புலவர்களிடத்து வலிந்து கலைப்போர் புரிவதையே வேலையாகக் கொண்டவர். இன்னும் இவர் கதிர்வேலுக்கு எதிர்வேல் இல்லை என்று அந்த ஈழமெங்கும் கலை முழக்கம் செய்தவர். சிறந்த இலக்கியங்கள் சிலவற்றிற்கு உரை எழுதி இருக்கிருர். இலக்கணத்திலும் மிக வல்லமை பெற்றவர். இவர் வெகு காலம் தமிழகத்திலேயே வாழ்ந்தாராதலால், இவரிடம் தமிழ்ப் பாடம் கேட்டுக் கொண்ட தமிழர்கள் பலர் உள்ளனர். அவர்களில் அண்மையில் காலமான தமிழ் வளர்த்த பெரியார் திரு. வி. கல்யாண சுந்தரனாரும் ஒருவர்.

அங்கு வரவேற்புச் செய்த முஸ்லிம் பெருமக்கள் புலவரவர்களை அழைத்துக் கொண்டு போகையில் கதிர்வேற் பிள்ளை அவர்கள் நம் புலவரை அணுகி அன்பு செலுத்தி அளவளாவியவர், நான் உங்களை நாளைப் பார்க்கிறேன் என்று விட்டுப்போனார்.

நம் புலவர் பெரியார் கதிர்வேற்பிள்ளையின் உள்ளத்தைத் தொட்டுவிட்டார் போலும். அடுத்த நாள் அவர் தம் நண்பர் பொன்னம்பலம் பிள்ளை மற்றும் தமிழறிஞர்கள் பலர்

புடைசூழப் புலவரை வந்து கண்டுகொண்டவர், நீங்கள் அட்டாவதானம் பண்ணுவீர்கள் என்று கேள்விப்பட்டேன். அப்படியாயின் வண்ணூர் பண்ணையிலுள்ள எங்கள் மண்டபத்தில் நீங்கள் அவதானம் பண்ணுமாறு கேட்டுக்கொள்கிறேன் என்ருர். அபுபக்கர் நயினுர்ப் புலவரும் அதற்கு இணங்கிக் கொண்டாராதலால் அவதானம் பண்ணும் நாள் எல்லார்க்கும் விளம்பரப்படுத்தப்பட்டது.

அங்கு நம் புலவரை வரவழைத்து அவதானம் பண்ணுமாறும் புராண விளக்கம் பண்ணுமாறும் விரும்பிய முஸ்லிம் பெருமக்கள் யாவரும் கதிர்வேற் பிள்ளையின் விருப்பத்திற்கே இணங்கிவிட்டார்களாதலால் அன்றைய அவதானக் காட்சியை என்றுமில்லாத காட்சி என்று எதிர்பார்க்கப்பட்டது.

குறிப்பிட்ட நாளன்று அவதானம் பண்ண ஆரம்பித்தார் நம் புலவர். அவதான பீடத்தில் அமர்ந்த புலவர் லாட சங்கிலியைக் கையில் எடுத்ததும் யா முகிய்யதீன் என்ற மந்திர நாமம் அவர் வாய்வழியாக அலம்பப்பட்டது. அன்றைய அவதானத்தின் துணைத்தளங்களாக அமர்ந்து புலவரிடம் கேள்விகள் கேட்க முன் வந்தவர்களெல்லாம் தமிழறிவு பெற்ற யாழ்ப்பாணத்துச் சைவப் பெருமக்களேயாவர்.

அவதானத்தின் முதல் வரிசை முடிந்து இரண்டாவது வரிசை ஆரம்பமானது. அப்பொழுது புலவரிடம் கேள்வி கேட்கவந்தவர்கள் புலவரைச் சுற்றிலும் மலரினை மொய்க்கும் வண்டுகள் போல ஆர்ப்பரித்துக் கொண்டிருந்தனர். ஒருவர் பின் ஒருவராக அணிவகுத்துக் கொண்டிருந்தவர்களில் ஒரு கிழவர் அரைக்கிறதில் முளைக்கிறது எது என்று கேட்டார். புலவர், உடனே அதற்குப் பரித்துக் கொட்டை என்று பதில் கூறினர்.

பின் அறுபது வயதுக்கு மேற்பட்ட ஒருவர் நான் என்ன கிழமை பிறந்தேன் என்று கேட்டார். அதற்கு விடையாக ஞாயிற்றுக்கிழமை என்ருர் புலவர். அப்பால் ஒருவர் ஒரு செம்பு நிறைய நீரை வைத்துக் கொண்டு இந்த நீர் எந்தக் கேணியில் எடுத்தது என்று கேட்டார். புலவர் சுன்ஞகத்துச் சோமையா கேணியில் எடுத்தது என்று விடை பகர்ந்தார். பின் புலவர் ஆசுகவி எழுதுவோர்க்குச் சொல் வரிசை பகர்ந்து திரும்புகையில் ஒருவர் வெண்பாவொன்றின் ஈற்றடி '' இறையவனே ஏத்தி இரந்து '' என்று முடிதல் வேண்டும். அதன் முன்னடிகளில் மும்மூர்த்திகளின் பெயர் வரல்வேண்டும் என்று கேட்டார். உடனே புலவர்,

'' ஆவேறும் ஈசன் அரவணையான் அக்காளே
மாவேறச் செய்து வலம்வருங்கால்—நாவால்
மறையவன் வாழ்த்திஞன் வானவர்கள் சூழ
இறையவனே ஏத்தி இரந்து ''

என்று வெண்பாவை முடித்தார். இங்கு ஈசன்—சிவன். அரவணையான்—திருமால். மறையவன்—பிரம்மா என்று காண்க.

பின் இறுதி வரிசை ஆரம்பமானதும் ஆறுமுக நாவலர் மருமகன் பொன்னம்பலம் பிள்ளை விதியையும் ஊழையும் இணைத்து ஒரு வெண்பாப் பாடவேண்டும். அதன் பின்னடி இரண்டும் குறளில் உள்ளதாய் இருத்தல் வேண்டும் என்று கேட்டார். உடனே நம் புலவர்,

'' தலைவிதியை மாற்றத் தலைவ ரெவரேனும்
உலகிலில்லை என்ப துறுதி — தொலைவிலா
ஊழிற் பெருவலி யாவுள மற்ருென்று
சூழினும் தாமுந் துறும் ''

என்று வெண்பாவை முடித்தார்.

இவ்வாறு அவதானச் சிறப்பு அவையோர் மனத்தை அதிசயத்தில் ஆழ்த்தியதால் அது வெற்றிக் கொடு முடியை அடைந்துவிட்டது. அங்கிருந்த மக்கள் எல்லாரும் போய்ப் புலவரைப் பொதுளிக் கொண்டு போற்றி மகிழ்ந்தார்கள். அவதான முடிவிலே அங்கு அவைக்கண் வீற்றிருந்த மகா வித்வான் பொன்னம்பலம் பிள்ளையவர்கள் நம் புலவரைப் புகழ்ந்து பாராட்டிய வெண்பா கீழே தரப்படுகிறது. அது,

" பக்கமறை தேர்ந்தோர் பலரிருக்கச் சீருறுரபு
பக்கர்நய் னுப்புலவன் பண்ணிய—மிக்கநல்
அட்டாவ தானமெனும் அற்புதத்தைப் பார்க்கிலிவன்
இட்டம் பெறுதார் எவர் "

என்பதே.

இறுதியாக நம் புலவரோடு கப்பலிலிருந்து கலைப்போர் புரிந்து அவரை முற்ற முற்றச் சோதித்து அறிந்தபின் அவர் கலைப் புகழை அந்த ஈழ நாடெங்கும் மேலோங்கச் செய்த மகா வித்வான் நா. கதிரைவேற் பிள்ளை அவர்கள் பாடிய பாராட்டுப் பாவும் இங்குத் தரப்படுகின்றது. அது,

" கப்பலிலும் ஈழக் கரையிலும் கண்டுசேர்
முப்பழம்போல் ஊட்டினுன் முத்தமிழை—அற்புதமாய்த்
தக்கா னபுபக்கர் நய்னு தமிழ்ப்புலவன்
மிக்கார் பலர்முன் மிகைத்து "

என்பதே.

பின் நம் புலவர் அபுபக்கர் நயினுர் அவர்கள் ஈழத்தில் சில மாத காலம் பலர் வேண்டுதலுக்குப் பல காவியங்கள் பொருள்படுத்தி அங்குள்ளவர்களின் நல்லாசிகளைப் பெற்றுக்கொண்டு தமிழகம் வந்தவர் 1903-ஆம் ஆண்டு டிசம்பரில் இம்மண்ணுலக வாழ்வை நீத்தது கேள்விப்பட்ட கதிர்வேல் பிள்ளை, தமிழகத்தில் இருந்த ஒரு தமிழ்த் தாரகை மறைந்தது என்று செய்தித்தாள்களில் இரங்கல் தெரிவித்திருந்தார்.

# கீழைக்கரை அப்துல் மஜீதுப் புலவர்

தமிழகத்தில் வாழ்ந்த இஸ்லாமியத் தமிழ்ப் புலவர்களில் இராமநாதபுரம் கீழைக்கரை அப்துல் மஜீதுப் புலவரும் நம் அறிமுகத்திற்குரியவராவார். இவர் காலம் பத்தொன்பதாம் நூற்றாண்டின் ஆரம்பம் என்பதை அவர் யாத்துள்ள நூல்கள் நமக்கு இயம்புகின்றன. இப்புலவர் வள்ளல் சீதக்காதி மரக்காயரின் வழித்தோன்றல் என்பது வடித்துத் தெளித்த வரலாறுயுள்ளது. 1902-ஆம் ஆண்டிலே அச்சு வாகன மேறியுள்ள இவரது நூல்களே இவ்விளக்கங்களை எடுத்துக்காட்டுகின்றன.

இவர் இளமையிலே இஸ்லாமிய மார்க்கக் கலையை நன்கு கற்றுத் தேர்ந்தார். அத்துடன் தமிழறிவிலும் முற்போக்குப் பெற்று வந்தார். கீழைக்கரையிலுள்ள பெரிய வித்தியா சாலையில் இவர் கல்வி கற்று வந்தார். அதன் தலைமைப் பண்டிதர் குதுபுதீன் சாகிபு அவர்கள் அரபியிலும் தமிழிலும் மிக்காராய் இருந்தாராதலால் அப்துல் மஜீதுப் புலவர் இவ்விரு திறக் கலையையும் இரு கண்ணெனயக் கொள்வதற்கு வாய்ப்பாய் இருந்தது.

அப்பொழுதுள்ள அந்தப் பெரிய வித்தியாசாலை மாணாக்கர்களில் அப்துல் மஜீதுப் புலவர் முதல்வராய் விளங்கினார். மெல்ல மெல்லத் தமிழ்த் தேன் அவர் நாவிலே பிலிற்றிவிட்டதால் நினைத்தபோது பொருள்நயமுள்ள பாடல்களை அவர் பாடிவிடுவார். இவ்வாறு சொல்லழகும் பொருள் நயமும் தவழும் அவர் பாடல்களைக் கண்ணுறும் அவர் ஆசிரியரும் ஏனைய அறிஞர்களும் அவரைப் பலகாலும் பாராட்டுவது வழக்கம்.

பின் இவர் வர்த்தக சம்பந்தமாய் இலங்கையோடு தொடர்பு கொள்ளலானுர். ஆண்டும் இவர் முழுக் கவனமும் தமிழாய்விலேயே சென்று கொண்டிருந்தது. இதனுல் அவர் வர்த்தகத் துறையில் வெற்றிகாண இயலவில்லை. ஏன், எந்த மனிதரும் ஒரே நேரத்தில் இரு திசைகளை நோக்கி நடக்க இயலாதல்லவா? இது போன்றே இவர் வேட்கை எல்லாம் தமிழிலே சென்று கொண்டிருக்கையில் வர்த்தகம் அவர்க்குச் சேய்மையாய் விட்டது. பின்ஞெரு தக்க சமயம் வாய்த்தது அவருக்கு. அப்பொழுது ஈழத்திற்குச் சென்று குத்தகைத் தொழிலில் ஒருவரோடு இணைந்து ஒரளவு பொருளீட்டினுர். அத்துடன் அங்கிருந்து இப்ருஹிம் நயினுர்ப் புலவர் என்னும் தக்காரை அடுத்து நல்ல இலக்கண அறிவும் பெற்றுக்கொண்டார்.

இவர் பேசுகிற சாதாரண பேச்சிலேயே ஓர் அலாதி இனிமை கமழும். இது கண்ட பலரும் இவரிடம் பேச்சுக் கேட்கவே மிகப் பிரியம் கொள்வர். அவர்கள் நடத்திய குத்தகைத் தொழில் அதன் கால அளவிற்குப்பின் வேருெருவர்க்கு மாறிவிட்டதால் திரும்பவும் கொழும்பிற்கு வந்தார் அப்துல் மஜீதுப் புலவர்.

வரவர இவர் இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழ்த் துறையிலும் வல்லவரானுர். இவர் பண்ணூல் அமைப்பதில் மிகப் பிரியம் கொண்டவர். இவர் பாடியுள்ள பண்ணூல் மாண்பினை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள்மீது இயற்றியுள்ள இனிமை சான்ற செம்பொருள் கீர்த்தனங்கள் நன்கு விளக்கும். இவர் நாயகப் பெருந்தகைமீது அன்பு ததும்ப மனம் நெகிழ்ந்து பாடி இருக்கும் கீர்த்தன மஞ்சரி எவர் மனத்தையும் இழுத்துப் பிடித்துவிடும்.

இந்தக் கீர்த்தன மஞ்சரி மொத்தம் ஐம்பது கீர்த்தனங்களை உள்ளடக்கமாகக் கொண்டது. இப்பாடல்கள் அனைத்

தும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் வாழ்க்கை வழிகளையும் நபித்துவத்தின் உண்மைகளையும் விளக்குவனவாயுள்ளன. இவைகளில் சில கீர்த்தனங்களை மட்டும் இவர் பாடி வைத்திருக்கிற போது கல்பிட்டியில் இருக்கும் பொருள் வளமுடைய முகம்மதுத் தம்பி மரக்காயர் என்னும் நல்லார் ஒருவரின் நட்பு இவருக்குக் கிடைத்தது.

முகம்மதுத் தம்பி மரக்காயரும் நம் அப்துல் மஜீதுப் புலவரைப் போன்று மார்க்க வழிபாட்டில் சிறந்த பெரியார். தமிழாய்வதிலும் மிக ஆர்வமுடையவர். கல்விமான்களைக் கண்டால் தம் கண்ணனையக் கருதி அன்பு காட்டுவார். அதிலும் இஸ்லாமியத் தமிழ்ப் புலவர்கள் என்றுவிட்டால் அவர் உள்ளம் இன்பக் கடலாடிவிடும். இஸ்லாமியத் தமிழறிஞர்கள் நூல் தமிழர்வாழ் உலகெல்லாம் பரவ வேண்டுமென்பதில் மார்தட்டுகிறவர். பனைக்குளம் அட்டாவதானம் அபுபக்கர் நயினார்ப் புலவர் இலங்கை சுற்றுப் பயணம் நடத்தியபோது நீங்கள் சீருப்புராணத்திற்கு நல்லதான விளக்கவுரை எழுதுங்கள். நான் அதற்குரிய செலவு அனைத்தையும் கொடுக்கிறேன் என்றார் முகம்மதுத் தம்பி மரக்காயர். அதற்கு, நல்லது எழுதுகிறேன் என்று வாக்களித்து விட்டுத் தாயகம் வந்த அபூபக்கர் நயினார்ப் புலவர் காலமாய் விட்டாராதலால் அந்தக் கோரிக்கை தடைபட்டுப்போனது.

இத்தகைக் கொடைத் திறன் மிகுந்த கோமான் முகம்மதுத்தம்பி மரக்காயர் அப்துல் மஜீதுப் புலவர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மீது இனிய கீர்த்தனங்கள் பாடி அச்சிலேற்றி வெளியிடாமல் இருக்கிறார் என்பதைக் கேள்விப்பட்டுக் கொழும்புக்கு வந்தார். அன்றிலிருந்து முகம்மதுத் தம்பி மரக்காயர் அப்துல் மஜீதுப் புலவருக்கு நல்லாதரவு நல்க முன் வந்ததானது பயன் காய்த்த மரம் போல அப்துல் மஜீதுப் புலவர் கீர்த்தன மஞ்சரியை நிறைவு படுத்தவும் அச்சிலேற்றவும் உதவியானது.

இங்கு அப்துல் மஜீதுப் புலவர், முகம்மதுத் தம்பி மரக்காயர் தன் நூலிற்குத் தக்க சமயத்தில் மிக்கதாய்ச் செய்த பேருதவியை என்றும் மங்காதிருக்கச் செய்யவேண்டுமென்றே அவர் பிற்பகுதியாகப் பாடிய கீர்த்தனங்கள் சிலவற்றில் முகம்மதுத் தம்பி மரக்காயர் பெயரையும் இணைத்து வைத்துள்ளதை அறிகின்றோம்.

அப்பொழுது, மொத்தம் ஐம்பது பாடல்கள் தாம் நீங்கள் பாடி இருக்கிற கீர்த்தன மஞ்சரி. இதை அச்சலிட்டாலும் பார்வைக்குச் சிறியதாகவே காணும். ஆகவே இன்னும் பல பாடல்களைப் பாடி இதைப் பெரியதாகச் செய்தால் நன்றாக இருக்குமே என்று யோசனை கூறினார் முகம்மதுத் தம்பி மரக்காயர். அதற்கு அப்படியே செய்கிறேன் என்ற அப்துல் மஜீதுப் புலவர் ஒரு யாப்பு நூலையே உண்டாக்கி விடுகிறதெனத் திட்டம் வகுத்துவிட்டார். இத்தகைய திட்டத்தினின்றும் அவர் உள்ளப் பூஞ்சோலையில் அரும்பி வளர்ந்த மலர்தான் அவர் பாடி இருக்கிற ஆசாரக் கோவை.

ஆசாரக் கோவை நூறு கட்டளைக் கலிப்பாக்களை உள்ளடக்கமாகக் கொண்ட நூல். இதன் உள்ளடக்கங்கள் யாவும் இஸ்லாத்தின் திருமறைக் கருத்தையும் திருநபி அவர்கள் கருத்தையும் தழுவியதாகும். இன்னும் இஸ்லாத்தின் பண்பு நலன், மனித வாழ்க்கையின் மாண்பு இவைகளை விளக்கி நிற்கிறது பொன் மலைமீது மின் விளக்கு ஏற்றியதை யொக்கும்.

இக்கோவையில் காட்சிதரும் ஒவ்வொரு பாடலும் படிப்போர் மனத்திலே சன்மார்க்க நெறியையும் பொது நீதியையும் அள்ளி அளிக்கும் அறிவுக்களஞ்சியம் என்றே கூறலாம். இனிய செந்தமிழ் நடையில் எளிதில் பொருளை உணர்த்துகின்ற இந்நூல் இக்காலத்து முஸ்லிம் பெருமக்கள் கவனத்

தைப் பெருததாய்க் கண் மறைவில் கிடக்கிறது வருந்தத் தக்கவற்றில் தலையாய தென்றே கூறலாம்.

இக்கோவைப் பாடல் ஒவ்வொன்றினது ஈற்றிலும் "முகம்மதுத் தம்பி மாமரைக்காய சகாயனே" என்று அதன் ஆசிரியர் இறுவாய் அமைந்திருக்கிறது இந்நூலிற்கு ஓர் தனி அழகாகக்கூடும். இது நூலாசிரியர் தம் பாட்டுடைத் தலைவரைத் தகைமை செய்யும் மரபேயாயினும் ஆசிரியர் அங்கங்கே கையாண்டு செல்லும் உவமை நயங்கள் இந்த முகம்மதுத் தம்பி மரக்காயரின் பொன்ருப் புகழைப் பொலிவு பெறச் செய்து படிப்போர்களையும் இன்பத்தில் ஆழ்த்திவிடுகிறது.

எத்தகைய பெரும் பெற்றி இது ; தம் நூல் இங்குத் தமிழ் கூறு நல்லுலகிலும் இலங்கை மற்ற நாடுகளிலும் மிளிர்வதற்கு உதவியளித்தவரை உள்ளத்தில் உவந்தால் மட்டும் போதாதென்று நூல் உவமையிலும் ஒன்ற வைத்துள்ளதை யூகிக்கிற போது இ..து ஆசிரியர் கொண்டுள்ள உயிர்பெற்ற தான வாஞ்சையின் பெற்றியையே குறிக்கின்றது. இன்னும் இது மற்ருர்க்கும் நல்ல எடுத்துக்காட்டாய் இருந்து நாட்டிலே சமுதாயத்திலே கலையறிவு வளம் பெறவும் வழி வகுக்கிறதென்பது கண்கூடு.

இந்த அப்துல் மஜீதுப் புலவரிடம் இத்தகைய பெரும் தன்மைகள் பல மல்கிக் கிடந்தனவால்தான் அவர் காலத்திலிருந்த சிறந்த பல முஸ்லிம் தமிழ்ப் புலவர்கள் இவர் நூலையும் இவர் தரத்தையும் எல்லை இல்லாது புகழ்ந்து பாராட்டி இருக்கின்றனர். இவர் நூலிற்குச் சிறப்புப்பாயிரம் வழங்கிய பதினென்று முஸ்லிம் தமிழ்ப் புலவர்களும் இவர் கலைத் திறனை உவந்து உயர்த்தி இருக்கிருர்கள். இவர்களில் நாகூர் மகாவித்வான் குலாம் காதிறு நாவலர், திரிசிபுரம்

இலக்கண வள்ளல் பிச்சை இபுரூஹிம் புலவர் ஆகியோரின் ஆசிகளெல்லாம் இவரைச் சூழ்ந்து கொண்டிருக்கின்றன.

இனி இவரது இலக்கியமான ஆசாரக் கோவையின் பாடல் சிலவற்றைக் கண்டு தெளிந்து களிப்புள்ளம் கொள்வோமாக. அவை,

"கற்ற றிந்தவர் கற்றறி யார்க்குறக்
கற்பி யாமலி ருப்பதுங் குற்றமே
கற்றி லாதவர் கற்றறிந் தோரிடம்
கற்றி டாமலி ருப்பதுங் குற்றமே
கற்ற றிந்தவர் கற்றவை போலவே
கடமை யாய்நட வாமையுங் குற்றமே
தற்ப தந்தனி வாய்ந்தமு கம்மதுத்
தம்பி மாமரைக் காயச காயனே" (பாடல் : 7)

"பத்தி யீகையில் லாப்பணப் பாக்கியர்
பழமில் லாவிருட் சத்தினைப் போல்வரே
புத்தி யாய்வணங் காத்தகை ஆலிமும்
புனல்பெய் யாவெறுங் கொண்டலைப் போல்வரே
ஒத்த நாணமில் லாமட மங்கையர்
உப்பில் லாவெறுங் உண்டியைப் போல்வரே
தத்த முள்ளத யாளமு கம்மதுத்
தம்பி மாமரைக் காயச காயனே" (பாடல் : 19)

"அண்ணன் தம்பிசி நேகிதர் தங்களை
ஆபத் தாகிய வேளையிற் காணலாம்
ஒண்ணு நற்பொறை யுள்ளவர் தங்களை
ஓங்கும் வெஞ்சின வேளையிற் காணலாம்
நண்ணும் வீரிய முள்ளவர் தங்களை
நன்கு போர்புரி வேளையிற் காணலாம்
தண்ணந் தங்கிய செல்வமு கம்மதுத்
தம்பி மாமரைக் காயச காயனே" (பாடல் : 51)

என்பனவாம். எனவே இங்கு எடுத்துக் காட்டாகக் கொண்ட இச்சில பாடல்களுமே இவரது நூலினுள் சிறப்புடையனவாய் இருத்தல்கூடும் என்று எண்ணி விடற்க. ஊன்றி ஆராய்கிறபோது இவர் பாடல் ஒவ்வொன்றும் ஒன்றுக் கொன்று ஈடு இணை அற்றதாகவே இருக்கிறது என்பதை மேலுமொரு முறை கூறிக் கொள்கின்றேம்.

இந்தக் கோவை கீர்த்தனை நூல் வெளியில் வந்து தமிழகத்து முஸ்லிம்களிடையேயும் இலங்கை முஸ்லிம்களிடையேயும் பரவியது அப்துல் மஜீதுப் புலவருக்கு அரும் புகழை விளைவிப்பதாய் இருந்தது. அன்றிலிருந்து இலங்கை மக்கள் அப்துல் மஜீதுப் புலவருக்குப் பெருமதிப்புக் கொடுத்து நடந்து வந்தார்கள்.

கொழும்பில் பக்கிர் இபுருஹீம் என்பவரைப் புலவர் என்று சிலர் கூறுவர். இவர் சுயமாகச் சிறிது தமிழ்க் கற்றுக்கொண்டவர். சிருப்புராணப் பாடல்களில் சிலவற்றை நெட்டுருப்படுத்திக் கொண்டு அவைகளுக்குத் தலைதூர் இல்லாமல் பொருள் படுத்திக்கொண்டு திரிவார். யாரிடத்தும் இனிமையாகப் பேசி இடம் பெற்றுவிடுவார். இவர் தொடர்பு முதலில் சருக்கரை போன்று இனிக்குமேயாயினும் அதன் முடிவு அழிவாகவும் இழப்பாகவுமே இருக்கும்.

நேற்றுத் தனக்கு நன்றி செய்தவரிடத்தும் இன்று தன் நலத்திற்குத் தீங்கு செய்வதில் பின் வாங்கமாட்டார். பணமென்று சொன்னல் எந்தக் காரியத்தையும் துணிச்சலாகச் செய்து விடுவார். மக்களுக்குள் அங்கங்கே ஏற்படுகிற பூசல் பொல்லாங்குகள் எல்லாம் எங்கிருந்து உண்டாகின்றன வென்று ஆராய்ந்தால் அவைகளுக்கு இவர்தான் காரணமாக இருப்பார். சுயநலக்காரர்கள், பிறரைக் கெடுத்து வாழ்கிறவர்கள், பொய் வழக்குத் தொடர்கிறவர்கள் எல்லாரும் இவரையே விடாது ஒட்டிக்கொண்டு இருப்பார்கள்.

இவர் சில வர்த்தகத் தலங்களில் கணக்காயராய் இருந்து பகல் கொள்ளை அடித்துவிட்டாராதலால் இவரை அங்குப் பகல் கொள்ளைப் பக்கிர் இபுருஹிம் என்று சொன்னால்தான் விளங்கும்.

கொழும்பிலுள்ள முஸ்லிம் பெருமக்களும் ஏனையோர் களும் இவரைக் கண்டால் அன்பினர் போலக் கொண்டாடிக் கொள்வார்கள். மறைமுகமாய் இருந்து துன்பம் விளைவிக் கும் வம்பர் என்பதை முன்னிட்டு உள்ளுக்குள் மன மருட்சி கொண்டிருப்பதுதான் அவர்கள் இவரைக் கொண்டாடுவ தற்குக் காரணம். இவ்வாறு கொண்டாடுதலும் நாளடை வில் தளர்வு கண்டு கொண்டிருந்ததால் நாளுக்கு நாள் மக் களிடம் பக்கிர் இபுருஹிம் செல்வாக்குக் குன்றிக் கொண்டு போனது.

இங்ஙனம் தன் செல்வாக்குக் குன்றுதலைக் கவனத்தில் கொண்டுவிட்ட பக்கிர் இபுருஹிம் இந்த அப்துல் மஜீதுப் புலவர் இங்கு ஒளிபிறங்க ஏற்பட்ட பிறகுதான் நம்மை யாரும் மதிப்பாரில்லை, எனக் கருதிவிட்டவர், உத்தமரான அப்துல் மஜீதுப் புலவர் மீது அழுக்காறு கொள்ளலானார். இதனால் சமயம் வாய்த்த போது இந்த அப்துல் மஜீதை மட் டம் தட்டி இங்கிருந்து அக்லப்படுத்திவிட வேண்டுமென்று எண்ணிவிட்டார். இதற்காகத் தனது சகபாடிகள் சிலரை யும் ஆளாக்கிக் கொண்டு சூழ்நிலையை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்.

ஒரு நாள் வெள்ளிக்கிழமையன்று மருதானைப்பள்ளியில் குத்துபாத் தொழுததன்பின் அப்துல் மஜீதுப் புலவரை மார்க்க உபந்நியாசம் புரியும்படி சிலர் வேண்டினார்கள். அப் பொழுது தொழுகை என்னும் பொருள் பற்றி அரியதொரு சொற்பொழிவு நிகழ்த்தினார் புலவர். அவர் பேசியதாவது:

தொழுகை இஸ்லாத்தின் இரண்டாவது கடமை. இக் கடமையை மூன்ருவது கடமையாகிய ஏழை வரியோடு இணைத்துத் தன் திருமறையில் பலவிடங்களில் கூறியுள்ளான் ஆண்டவன். தொழுகையில் பல ஆழிய கருத்துக்கள் காண்கின்றன. முதலிலே அடியானை ஆண்டவனேடு இணைப்பதற்குத் தொழுகைதான் வழிகாட்டி வைக்கிறது. பின் மனித குலத்தை நல்ல வழியில் நடத்துவதற்குத் தொழுகை எதிர்கொண்டு அழைக்கிறது.

ஆண்டவன் இட்ட ஆணையை மனத்தில் ஒப்புக் கொண்டவர்கள் செயலில் காட்டுவதற்கும், மனமாசைப் போக்கிப் புறத்தைத் தூய்மைப் படுத்துவதற்கும், நோய் களுக்கு இடம் கொடாது உடல் வளர்ச்சி பெறுவதற்கும் தொழுகை உறுதுணை செய்கிறது. இன்னும் மனிதருக்குள் அன்பு, நம்பிக்கை, நட்பு இவைகளை வளர்த்து அவரவரையும் உயரிய பாதையில் நடத்திக் கொண்டிருக்கிறது தொழுகைதான்.

அநேகர் தொழுகையை வாரத்துக்கொரு முறை குத்துபாவில் முடித்துவிட்டு ஐவேளைத் தொழுகையைப் பராமுகப் படுத்தி விடுகிருர்கள். இவர்கள் தங்கள் உள்ளத்தையும் உடலையும் வாரத்துக்கு ஒரு முறை கழுவிக் கொள்கிறவர்கள் போன்றவர்களே என்று தொழுகையின் விழுப்பத்தையும் பயனையும் பற்றி விரிவாகவும் அழகாகவும் பேசி முடித்தார்.

கூட்டம் முடிவிலே பக்கிர் இபுருஹிம் புலவர், அப்துல் மஜீதுப் புலவரிடம் நீங்கள் வாரத்துக்கு ஒரு முறை தொழுகிற குத்துபாவை இழிவுபடுத்திப் பேசினீர்களே. அப்படியானுல் குத்துபா தொழுகிறதில் பயன் ஒன்றுமில்லையோ என்ற கேள்வியை எழுப்பினுர். அப்துல் மஜீதுப் புலவர்

ஆச்சரியமுற்றுப் போய் நீங்கள் வயதாலே பெரிய மனித ராய் இருந்தும் இத்தனைதூரம் செய்தியை விளங்காமல் பேசுகிறீர்களே! குத்துபா தொழுகையில் பயன் ஒன்று மில்லை என்று யார் பேசியது? நான் என்ன பேசினேன்? அதற்கு நீங்கள் என்ன பொருள் பண்ணினீர்கள் என்று எதிர்மொழி கூறினர். இங்ஙனம் அப்துல் மஜீதுப் புலவர் எதிர் மொழி கூறிக்கொண்டிருக்கிறபோதே இவர் பேச்சு பிறர் செவியில் விழாதவண்ணம் பக்கிர் இபுருஹிம் சக பாடிகள் சிலர் சலசலப்புப் பண்ணினர்கள். எனினும் அங்குப் பக்கிர் இபுருஹிம் புலவரின் எதிர்ப்பும் அவர் சகபாடி களின் சலசலப்பும் அங்கிருந்த கீர்த்தி வாய்ந்த முஸ்லிம் களிடம் விலை போகவில்லை. அப்பால் அங்குச் சமுகத் தலைவராய் வீற்றிருந்த அப்துல் ரஸாக்கு ஆலிம் எழுந்து பக்கிர் இபுருஹிமிடம் 'நீர் வாரத்துக்கு ஒரு முறை குத்துபா மட்டும் தொழுகிறவர்; உம் முன் ஐவேளைத் தொழுகை யைக் கூறினல் உமக்கு ஆத்திரம் வருகிறது. இங்குப் புலவர் பேசியது சட்டத்தையும் நியாயத்தையும் ஒத்ததாய் இருக்கையில் ஒன்றும் விளங்காமல் நீர் கத்துகிறீர்' என்று அவரைச் சுடச் சுடக் கண்டித்து அனுப்பினர்.

பின்னெரு முறை அப்துல் மஜீதுப் புலவர் சிருப்புராணத் திற்கு உரை பகர்ந்துகொண்டிருந்தார். அப்பொழுது பல சமுகத்து மக்களும் கலந்திருந்து பொருளின்பம் பருகிக் கொண்டிருக்கையில் பக்கிர் இபுருஹிம் புலவர் பல தலைதூர் இல்லாக் கேள்விகளைக் கேட்டுக் கொண்டிருந்தார். அவை களுக்கும் அப்துல் மஜீதுப் புலவர் மன அமைதியோடு பதில் கூறியவராய் உரைபகர்ந்து கொண்டிருந்தார். இங்குப் பக்கிர் இபுருஹிம் புலவர் கேள்விகளை எழுப்பியது தனக்குத் தெரி யாத வற்றைத் தெரிந்து கொள்ளும் தன்மையினதாய் இல்லை. தான் பெரியதொரு புலமைத்தன்மை பெற்றவர் போலப் பார்ப்பவர்கள் தன்னை மதித்துக் கொள்ளவேண்டு

மென்பதிலேயும், ஏதாவது முரண்பட்ட கேள்விகளைக் கேட்டு அப்துல் மஜீதுப் புலவரை மட்டம்தட்ட வேண்டு மென்பதிலேயும் அவர் நடந்துகொண்டார்.

இங்ஙனம் பக்கிர் இபுருஹிம் கேட்டு வந்த கேள்விகள் அப்துல் மஜீதுப் புலவரின் உரை படுத்தலுக்குப் பெரிதும் ஊறு விளைவிப்பதாய் இருந்தன. இதனால் மனம் வேறு பட்டுவிட்ட அப்துல் மஜீதுப் புலவர், ஒரு புலவரிடம் கேள்வி கேட்க வருகிறவர்கள் தனக்குத் தெரியாதவற்றைக் கேட் டுத் தெரிந்து கொள்ளலாம். அல்லாமல் எதிர்க் கேள்வி கேட்க வருகிறவர்கள் தானும் நல்ல புலமை பெற்றிருக்க வேண்டும். ஏன்? எங்கேயேனும் படித்தவர் படுத்தும் பய னையோ பிழையையோ இன்னும் நன்றாய்ப் படித்தவர்கள் தாம் அறிந்து விளக்க வியலும். இத்தன்மையில்லாமல் வாயில் வந்ததெல்லாம் கேள்வி என்று கேட்க வந்து விடு வது கூட்டத்தின் ஒழுங்கையும் நோக்கத்தையும் கெடுப்ப தாகவே இருக்கும். ஆகவே இத்தகைத்தான குருட்டுக் கேள்விகளை மேலும் மேலும் கேட்கவேண்டாமென்று கூறி னார்.

அவ்வளவுதான், பக்கிர் இபுருஹிம் புலவர் நீர் என் னைக் குருடன் என்று கூறிவிட்டீரே. நான் உண்மையில் குருடனா? என்னை நீர் நன்றாக உற்றுப்பாரும் என்று வம்பு வளர்க்க முற்பட்டார். அதற்கு அப்துல் மஜீதுப் புலவர் நீர் கேட்டுக் கொண்டிருந்த கேள்வியைத்தான் நான் குருட் டுக் கேள்வி என்று கூறினேன். வரவர உமது தன்மையை நோக்குகிறபோது உம்மைக் குருடர் என்று சொன்னால் அது பொருந்தக் கூடியதுதான். உம் வாயில் இருந்து வெளி வந்த சொல் உம்மையே சூழ்ந்த கொண்டது. இன்று முதல் நீர் குருடர் தாம் என்ற ஒரு வார்த்தையை அழுத்தமாகக் கூறிவிட்டார்.

ஒரு வாரம்கூடச் செல்லவில்லை. பக்கிர் இபுருஹிமுக்குப் பார்வை மங்கி எழுத்து வாசிக்க முடியாமல் போய் விட்டது. பின் சில நாளையில் அவர் கண்களிரண்டும் பழுது படாது பார்வை முழுவதும் பழுதுபட்டுவிட்டது. இந்நிகழ்ச்சி அங்குக் கொழும்பு மக்களிடையே பெரிய அதிசயத்தையும் மன அதிர்ச்சியையும் உண்டுபண்ணி விட்டது. இவ்வாறு கண்பார்வை இழந்து விட்ட பக்கிர் இபுருஹிம் அப்துல் மஜீதுப் புலவர் கால்களில் விழ்ந்து, பெரியீர்! நான் தங்கள் மகிமையை அறியாத பாவி. நான் தங்களுக்குப் பெரும் பிழை செய்து விட்டேன், என்னை மன்னித்தருள வேண்டு மென்று நெஞ்சம் கலங்கி நெக்குருகி நின்றார்.

அப்துல் மஜீதுப் புலவர், ஓய் பக்கிர் இபுருஹிமே! நீர் உமது வாழ் நாள் அனைத்தையும் மக்களை வஞ்சிப்பதிலும் உமது நலனுக்காகப் பிறரைப் பழி கொடுப்பதிலுமே காலத்தைப் போக்கி இருக்கிறீர். இன்னும் சில காலத்தில் இவ்வுலகத்தை விட்டும் விடுதலை பெற்றுக் கொள்கிற இந்த அந்திய காலத்தில்கூட உமக்கு நல்ல புத்திகள் வந்ததாய் இல்லை. நீர் பல காலமும் நயவஞ்சகமாக மக்களுக்குச் செய்து வந்த பழிபாவங்களை இதற்குமேல் ஆண்டவன்தான் பொறுக்கவேண்டுமல்லாது நான் பொறுப்பவனல்லன். இங்கு என் சொல் முந்தி விட்டது. அது பட்டது பட்டதுதான் என்று விட்டார். பின் சில மாசங்கள் வரை பக்கிர் இபுருஹிம் புலவர் குருடராகவே இருந்து இறந்துவிட்டார்.

———

# மெய்ஞ்ஞான அருள்வாக்கி அப்துல் காதிறுப் புலவர்

இவ்வுலகம் பலதிறத்து மக்களையும் ஈன்று கொடுக்கிறது. இவர்களுள் புகழுக்குடையோர்களையும் அது ஈன்று கொடுக்கிறது. இங்குப் புகழுக்குடையோர்கள் யாவர் என ஆராய்கிறபோது பெரியோர்கள், ஞானவான்கள், கவிவாணர்கள், கலைஞர்கள், வள்ளல்கள், வீரர்கள் எனப்படுபவரே. அரியவைகள் எங்கேயேனும் இருப்பின் அவைகளுக்குப் பிரியமும் இருப்பது வெளிப்படை. இது போன்றே புகழுக்குடையோர்கள் எங்கேயேனும் இருந்தால் அவர்களுக்குப் பிரியம் இருப்பது வெளிப்படை. இதோடு மட்டுமன்று. அரியவை உற்பத்தியாகிற இடங்களுக்கும் பிரியம் இருக்கிறது கண்கூடு. இது போன்றே புகழுக்குடையோர்கள் பிறந்த ஊர்களுக்கும் புகழ் இருக்கிறதை அறிகிறோம்.

நாம் கேள்விப்படுகிற பெரிய மனிதர்களாகிய ஞானவான்கள், கவிவாணர், கலைஞர், வள்ளல், வீரர் இவர்களைப் பற்றி முடிவில் இவர் எந்த ஊர் என்று அவர் ஊரைக் கேட்டுத் தெரிந்து கொள்கிறோமல்லவா? எனவே புகழுக்குடையோர்கள் தாம் பிறந்த ஊர், குலம், இனம், அக்கம் பக்கம் எல்லாவற்றிற்குமே புகழை உண்டாக்கி விடுகிறார்கள். இன்னும் அவர்கள் தம் நாட்டிற்கும் புகழை அளித்து விடுகிறார்கள். இவர்கள் வரலாறு எத்தனையோ ஆண்டுகள் வரை வெளிக்கு வராது மண்ணில் புதைந்து மறைந்து விட்டது போல மக்கிப்போய்க் கிடந்தாலும் ஒரு காலத்தில் அவ்வரலாறு புகழ் வானிலே மிளிரும் முழுமதியம் போல ஒளி வீசிவிடுகிறது.

இத்தகையோரில் ஓர் அரும்பெரும் புகழுக்குடை யோரையே உங்களுக்கு அறிமுகம் செய்து வைக்கிறது இந்த வரலாற்றுப் பகுதி. அவர் தான் நமது செந்தமிழ் நாட்டில் பத்தொன்பதாம் நூற்ருண்டில் வாழ்ந்த மெய்ஞ்ஞான அருள் வாக்கி என்னும் அப்துல் காதிறுப் புலவர். இவர் பிறந்தது இராமநாதபுரம் மாவட்டம் சிறப்பு வளர் ஊராகிய திருப் புத்தூர் எனப்படும். இந்தத் திருப்புத்தூர் தான் இக் காலை திருப்பத்தூர் எனச் சிறிது ஒலி வேற்றுமை பெற்று வழங்கி வருகிறது. இவர் இளமை உள்ளம் தமிழ்க் கடலில் மூழ்கி நல் முத்து எடுக்க வேண்டுமென்று பிடர்பிடித்துந்தினதால் அவ் ஊர் வித்வ சிரோமணி மகுமூது முத்துபாவா புலவரிடம் தமிழ்ப்பாடம் கேட்டுத் தேர்வு பெற்ருர்.

சில நாளையிலேயே இவர் ஆராய்ச்சி வளம் உள்ளத் தடாகத்தில் தேங்கி வழிந்து விட்டதால் இவர் கலைச்சுனை, கவிதைச் சுனையாகப் பொங்கி எழத்தலைப்பட்டது. அன்றி ருந்து! இவர் காவியம் படைப்பதை வேலையாகக் கொண்டு விட்டார். இவர் பாடல்கள் சொல்லழகு, பொருள் பெருக் கம், ஓசைப்பண்பு, இலக்கண அமைதி இவைகளில் நனி சிறந்து இருப்பதோடு நல்ல உயிர்த்துடிப்புக்களும் ஓடிக் கொண்டிருந்தனவால் அவைகள் எவரது மனத்தையும் இழுத்துப் பிடிப்பனவாய் இருந்தன. இது காரணமாகவே நம் கவிஞர் பெருமக்கள் இவரைக் காந்தக் கவிராயர் என்ற சிறப்புப் பெயர் செப்பி அழைக்க முன் வந்தனர்.

இஸ்லாமியப் பண்பு நலன்களை வாய்க்காலாய் வெட்டி ஓடவிட்டிருப்பது போல முப்பது நல்லிலக்கியங்களைச் செந் தமிழிலியற்றித் தமிழுக்குப் பெரும் பணி புரிந்திருக்கிருர். அந்நூற்கள் ஒவ்வொன்றும் ஒவ்வோர் இயலிலே ஒப்புயர் வற்றதாய்த் தமிழ்ப் பெருங்கலைக்கு அரணாகவும் அணி யாகவும் அமைந்திருப்பதானது இவருக்கே இயலான ஒரு

தனி உயர்வையும் மகத்துவத்தையும் விளக்குகின்றன. ஆகவே அந்நூற்கள் எப்பெயருடையன என்பதை ஈண்டுக் கீழே காண்போம்.

அவை, பேரின்ப ரஞ்சித மாலை, திருமதீனத்து மாலை, புது மொழி மாலை, ஆரிபு மாலை, ஞானப் பிரகாச மாலை, பிரான் மலைப் பதிகம், தேவாரப் பதிகம், சலவாத்துப் பதிகம், பதாயிகுப் பதிகம், காணுமியா சாகிபு வலியுல்லா பதிகம், சம்சுகான் வலியுல்லா பதிகம், கண்டி சிகாபுதீன் வலியுல்லா பதிகம், முத்துப்பேட்டை சைகுதாவூது ஒலியுல்லா பதிகம், காரணப் பிள்ளைத் தமிழ், உமறுெலியுல்லா பிள்ளைத் தமிழ், காட்டுவா சாகிபு கும்மி, சித்திரக் கவிப் புஞ்சம், பிரபந்தப் புஞ்சம், பலவண்ணத் திரட்டு, ஞான மணித் திரட்டு, திருபகுதாதந்தாதி, கண்டிக் கலம்பகம், மெய்ஞ்ஞானக் குறவஞ்சி, சரமகவிக் கொத்து, நவமணித் தீபம், விநோத பதமஞ்சரி, கோட்டாற்றுப் புராணம், மெய்ஞ்ஞானக் கோவை, சந்தத் திருப்புகழ் என்பனவாம். இவற்றில் பகுதி நூல்களே அச்சுவாகன மேறி வெளியுலகில் உலாவலாயின.

இவற்றில் சந்தத் திருப்புகழ் என்னும் சிறப்புமிக்கதான நூலும் அடங்கும். இந்நூல் நூறு பாடல்களை உள்ளடக்கமாகக் கொண்டதாகும். இப்பாடல்கள் எல்லாம் எம்பெருமானார் முகம்மது நபி (ஸல்) அவர்கள் மீது பாடிய துதிப் பாக்களாகவும் வேட்டல் பாக்களாகவும் காணப்படுகின்றன. அழகுத் தமிழிலே மக்களுக்கு ஆத்மீக விருந்தளிக்கின்ற இந்தப் பாடல்களை ஒப்பு நோக்குகிறபோது திருப்புகழரசர் காசீம் புலவர் பாடல்களை அப்படியே கட்டித்தழுவினவாய்க் காண்கின்றன. இந்தச் சந்தத் திருப்புகழை நன்கு படித்து இன்பம் துய்த்த முப்பத்து நான்கு கவிஞர்கள் அந்நூற்குச் சிறப்புப் பாயிரம் வழங்கி இருக்கிறார்கள். இவர்கள்

28 இஸ்லாமியப் புலவர்களும் 6 தமிழ்ப் புலவர்களும் ஆவர்.

நாகூர் செவத்த மரக்காய சிரியர், நாகூர் வா. குலாம் காதிறு நாவலர், கீழைக்கரை மு. க. அ. அப்துல் மஜீதுப் புலவர், திருப்புத்தூர் மகுமூது முத்து பாவா புலவர், மேலூர் நா. க. உ. முகம்மதுக் களஞ்சியப் புலவர், பனைக்குளம் அட்டாவதானம் அபுபக்கர் நயினார்ப் புலவர், இரசைப்பதி அட்டாவதானம் முகம்மது மீராப் புலவர், கீழைக்கரை செ. மு. செய்யிது முகம்மது ஆலிம் புலவர், அழகங்குளம் த. சி. பக்கீறுக் கனிப் புலவர், மேலூர் கொட்டாம்பட்டி அட்டாவதானம் சரவணப் பெருமாள் கவிராயர், (இந்தக் கவிராயர் குமாரர்) ஆனந்தக் குட்டிசாமிக் கவிராயர், வக்கீல் காத்த முத்துப் பிள்ளை ஆகியவர்கள் மேற்கூறிய சிறப்புப்பாயிரம் வழங்கியவர்களுள் முக்கியமான வர்கள்.

இந்த மெய்ஞ்ஞான அருள் வாக்கி அப்துல் காதிறுப் புலவர் தன் வாழ் நாளில் பெரும் பகுதியை இலங்கையி லேயே கழித்து வந்திருக்கிறார். இவர் இயற்றியுள்ள நூல் கள் சில இலங்கையில் அச்சேறி இருக்கின்றமை இதற்குச் சான்று பகர்கின்றன. இவர் இயற்றியுள்ள சந்தத் திருப் புகழும் கொழும்பிலுள்ள நடராஜ அச்சகத்தில் 1909-ஆம் ஆண்டில் அச்சேறி இருக்கிறதை அறிகிறோம். இன்னும் இவருடைய நூல்கள் சில இலங்கையிலுள்ள கண்டியைக் குறிக்கொண்டு நிற்கின்றனவால் இப்புலவர் கண்டியோடு அதிகம் தொடர்பு கொண்டிருந்தது புலனாகின்றது.

பின் நாம் இவர் சந்தத்திருப் புகழைக் கண்ணுறுகிற போது அவற்றில் பொதிந்து மிளிரும் ஒவ்வொரு பாடலும் நம் உள்ளத்திற்கு உயர்வுமிக்க உவகை விருந்தை அளித்து விடுகின்றன. ஆகவே அவைகளில் சில பாடல்களை இங்குக் கண்டு களிப்போமாக.

முதலிலே தம் நூலிற்குக் காப்பாக இறை வணக்கம் கூறிய கவிஞர் கீழ்க்காணுமாறு நூல் பயன் கூறியுள்ளார். அது,

''திருவளர் ஞானமேவும் செழும்பர கதியில் சேர்க்கும்
குருபரன் அருளைப் பூட்டும் கோதிலா நிதியுண் டாக்கும்
கருவளர் முகம்ம தெங்கோன் கருணையுண் டாமெந் நாளும்
தெருளமைந் துயர்ந்த சந்தத் திருப்புகழ்படிப்போர்க் கன்றே''

என்று இவர் தம் பாடல் படைப்பிலே, படைப்பாதிகளுக் கெல்லாம் கருப்பொருளாய் அமைந்துள்ள எம் பெருமானர் முகம்மது (ஸல்) அவர்கள்மீது யான் இயற்றியுள்ள இந்தச் சந்தத் திருப்புகழைப் படிக்கிறவர்களுக்குப் பெருமானவர் களின் கிருபையின் பெருக்கால் ஞானம் வளம் பெறும். தெய்வீகத் தன்மை வந்தெய்தும். அருள் என்னும் ஆண்ட வனது நற்பாக்கியம் வந்து கிட்டும். இன்னும் குற்ற மற்ற தான செல்வ நிலையும் பெருகும். இன்னும் அவர்கள் இவ் வுலகில் நல்லடியார்களாய் வாழ்ந்து மறுமையிலும் ஆண்ட வனது நற்பேற்றினைப் பெற்றுக் கொள்வார்கள் என்று வாழ்த்தி வரமளித்து விடுகின்ருர்.

அப்பால் இவர் தம் நூல் மகிமை கூறுகிறபோது,

''கரும்பிக் கிருக்க எவர்வேம்பை வேண்டுவர் கற்றுணராத்
துரும்பொக்கும் ஈனர் உரையேற்கு மோகுங்குமத் தொடையில்
சுரும்பிக் கயின்று முரன்மார்பர் எங்கள்துரை யிறசூல்
தரும்பொற் பதம்புகழ் கேட்டபின் தீனவர் தம் செவியே''

என்று பெருமுழக்கமிடுகிருர். இதன் கருத்துக்கள் ஒப் புயர்வற்றதான இஸ்லாத்தின் உண்மைத் தத்துவங்களை அப்படியே வடித்தெடுத்து நமது இதயக்கிண்ணத்தில் வார்ப்பதுபோல் இருக்கின்றன. எத்தனை இன்பம்தான்

வழிந்தோடுகிறது இந்தப் பாடலிலே! தித்திக்கும் தீங்கருப்பை நித்தமும் தின்று பழகின்றவர்கள் எவரேனும் வெறுப்புணர்வையே கொடுக்கின்ற வேம்பினை நச்சி நயப்பார் கொல்லோ! மனித வாழ்க்கையை மாண்புறச் செய்கின்ற மறையுரை பகரும் முகம்மது நபி (ஸல்) அவர்களுக்கு எதிராகத் துரும்பனைய ஈனர்கள் செய்த எதிர்ப்பும் துடுக்குத்தனமுடைய கயவர்கள் ஆர்த்த போர் முரசும் நிலை நின்றனவா? என்று விடுகிற அறைகூவலிலே மெய்யே நிலை நின்றது; பொய் பொய்யாகவே போயிற்று என்பதையும் எதிர் மறைப் பொருளாய்க் கூறிவிடுகிறார். பின் இவர் சந்தத் திருப்புகழில் சில பாடல்களை உந்திப் பார்ப்போம். அவை,

(1) " சலதி வளைநில நெடுமலை களுமுயர்
ககன வெளிமுக டழகில கியதிசை
சருவ பொருளுயி ருளவில வமரரு மழகான

(2) தலமு மிகுபுக ழுறுநிரை தனதரு
ளொளிவி லெழிலுற நடமுட னிறுவிய
தனிய நெருதுணை யிணையில னவனரு ளகலாத

(5) அலகி லுயிர்களு முமதொளி வினிலுறு
மிறுதி நபியென வருபவ மறைவழி
யதனி லுயர்நடை புரிபவர் குருவென வருவோரே

(7) திலத மணியென வருநபி களினுயிர்
சிவனு மகுஷ றி லொருமுத லவனரு
டிவிய சமுகம தினிலெழி லொடுபுகு பதபாக

(8) ஜெயமொ டருளுரை பகர்பவ வெவர்களு
நயன மணிமறை மணியென வுரை தரு
திரும தினதல சுவனமு மரசுசெ யிறசூலே."

இந்தப் பாடலிலே நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஆதியையும் அந்தத்தையும் இவ்வாறென அறிந்து தெரிந்து அப்பெருமானவர்களைத் தன் இதயத்திலிறுத்தி ஏத்தித் துதித்து அந்நாயகரது இணைமலர்ப் பதம் இரண்டையும் தம் வினையகல உதவுமாறு வேண்டுகின்ற கவிஞரின் கூற்று படிப்போர் உள்ளத்தை உருக்கி உணர்ச்சியில் ஆழ்த்தி விடுகின்றது. பின் இவர் 13-ஆம் பாடலை முற்றிலும் படித்து இன்புறுவோமாக. அது,

"சுரமேக வாதபித்த மதிசார மேலிளைத்த
ருெடு தோஷ மூலரத்த மலமாருத்
துயர்மேவு சூலைகுட்ட முதிர்சோகை நாவரட்சி
சொறிகாச நீரடைப்பு வதிதாகம்

கரவாக நீள்வலித்தல் தொடைவாழை வாயுவிக்கல்
களமாலை பேதிமற்ற விடுநோய்கள்
கவிபாடு தாதனுக்கு முயர்வான தீனினத்தர்
கவிவாணர் யாவருக்கு மணுகாமல்

வரமாரி யேயு குத்து
மனமேவு ஞான வித்து
வளமாக வேத ழைக்க விருபாத

மலரேசி நேக முற்று
நினைவாக வேப டித்து
மதியேம ருதி ருக்க வருள்வீரே

தரமேவு கார ணத்த
ரொலி மார்க டேவர் மிக்க
தவமேவு பாத முத்தர் முனைவீரம்
தணியாத வாள்வ லத்த
ரசுஹாபி மார்க ளுற்ற
தளிமேவு சோலை மக்க விறசூலே"

இந்தப் பாடலிலே நோய் அகற்றி வைக்குமாறு வாய் இனிக்கப் பாடி இருக்கின்ற கவிஞர் குறிப்பாகப் பாடல் படித்துப் பரவசமடையும் தாதன், பக்தியொழுக்கமுடைய நல்லார், அறம் வலியுறுத்தும் கவிவாணர் ஆகியவர்களை முன் வைத்துப் பேசுகிறது நமக்கொரு சிந்தனை விருந்தாய் அமைந்திருக்கிறது. இவ்வுலகம் என்றும் நல்லவர்களாலேயே நிலை பெற்று நிற்கிறதால் நல்லவர்கள் நலிவுறக்கூடாது என்பதே. அப்பால் இவரது 30-ஆம் பாடலின் முற்பகுதி சிலவற்றில் கவனத்தைப் புகுத்துவோம். அது,

"வேத நீதி தவிர்த்து நடந்தவ
மான பாவ மிகுத்து ழலுந்தவ
வேட மூடி நிதிக்க லேயும் பிழை யுறுமுடன்
வேண வாயை யறுத்து நறுந்தமி
ழோது மாறு மனத்தி னுறும்பகை
மேவு மூட மகற்றி விளங்கிய புவிவானும்
காத நான மணக்கு மலங்கித
பாத தாம ரையைப்பெ றவும்பெறு
காணி யான சுவர்க்க நலம்பெற வருள்வீரே"

இந்தப் பாடலிலே மனிதன் என்றும் அறிவிலே நிறைவு பெற இயலாதவனாதலால் யான் அறியாது செய்துள்ள குற்றங்கள் யாவையும் பொறுத்து எனக்குரிய சொந்தக் காணி யான சுவர்க்க பதவியை அளித்தருளுமாறு வேண்டுவதிலேயே நான் இனியன யாவையும் தமிழ்ப் பாடலாகப் பாடித் தமிழ் இன்பம் பெறவேண்டுமென்று தமிழுக்கும் பெரியதொரு பெருமையை நிலைநாட்டி விடுகின்றார் கவிஞர். இதன் பின் நாம் காண்பது 53ஆம் பாடல். அது,

" ஆதிமுத லோன ளித்த
மூதுமறை நேர்ப டித்த
ஆலிமுல மாத வத்தர் களைநேச

மாகியுப தேச சித்தி
மால்பழகு மாசை விட்டு
ஆசுகவி யீன லுத்தர் களின்மீது

காதலுட னேப டித்து
வாயில்புக வேவி ரட்டு
காலபரி சேத முற்று மெலிவேனே

காரணவி னோத பத்ம
பாதவினை யேது தித்தொர்
காதனிறை வேற வெற்றி தருவீரே ''

இந்த 53-ஆம் பாடல் முற்பகுதியிலே ஏ! எங்கள் ஏந்தலான இறசூலுல்லாவே இவ்வவனியிலே ஆண்டவன் அருளிய குர்ஆன் என்னும் திருமறையை மாசகலக் கற்று ஆசகல நடப்பவர்களான உங்கள் மெய்யடியார்கள் அன்பையும் நட்பையும் எனக்கு என்றும் அளித்துக் கொண்டிருப்பீர்களாக. பின் கல்வி நயமும் கவிதைச் சுவையும் அறிந்தில்லாது பணத்தையே பெரிதாக மதித்து நடக்கும் கயவர் மற்ற வஞ்சகர்களை அணுகி அவர்கள் மீது நான் பாடல் பாடவும் அதன் அருமையறியாது அவர்கள் என்னை வெருட்டி விரட்டவும் வைத்துவிடாது நான் நித்தமும் தங்கள் பத்ம மலர்ப்பாதங்களையே பாடிப் பாடிப் பரவுதல் செய்ய உதவிபுரிவீர்களாக வென்று இரந்து இறைஞ்சுகிறது நம் இதயத்தையே இன்பக்கேணியில் நனைத்துவிடுகிறது.

அப்பால் இந்த அப்துல் காதிறுப் புலவர்க்குக் கண்டி நகரிலே பெரிய மதிப்பு இருந்து வந்ததை அறிகின்றோம். அங்குள்ள முஸ்லிம்கள், சைவர்கள், சிங்களவர்கள் எல்லாருமே இவரையோர் அடிகள் எனக்கொண்டு அஞ்சலித்து வந்திருக்கிறார்கள். ஒரு நாள் இவர் பள்ளிவாயிலிலே (லுகர்) நண்பகல் தொழுகையை முடித்துக்கொண்டு வெளியே வரு

கையில் யாகூப் என்னும் இலங்கை முஸ்லிம், புலவரைத் தன் வீட்டில் வந்து விருந்துண்ணுமாறு அழைத்தார். புலவர் நல்லதென்று சொன்னவர் தன் பக்கத்திலிருந்த எட்டுப் பேரையும் கூட அழைத்துக்கொண்டு போனுர்.

இவ்வாறு புலவர் எட்டுப்பேர்களைக் கூட அழைத்துக் கொண்டு போனதைக் கண்ட யாகூபுக்குத் தலை சுற்ற ஆரம் பித்தது. நான் என்ன செய்வேன். நான் புலவரை மட்டும் தானே விருந்துண்ணுவதற்கு அழைத்தேன். அவர் மேற் கொண்டு எட்டுப்பேரைச் சேர்த்து அழைத்துக்கொண்டு வந் திருக்கிருரே! வீட்டிலுள்ள நான், என் மனைவி, என் மகள் இந்த மூன்று பேர்களும் உண்ணுமலிருந்தாலும் ஆக்கி இருக் கிற விருந்து ஒன்பது பேருக்குப் போதாதே; இதற்குமேல் பொங்கிப் படைக்கவும் நேரமில்லையே என்று கதிகலங்கிக் கொண்டிருக்கையில் புலவர் எனக்குப் பசிமேலெழுந்து விட் டது; உண்டியைக் கொண்டு வாரும் என்று யாகூபு இடம் கூறினுர்.

யாகூபு பெரிதும் தடுமாற்றத்தோடு தம் பானையில் இருந்த சோறு கறி அனைத்தையும் கொண்டு போய்ப் படைத்து ஒன்பது பேரையும் உண்ணும்படி சொன்னுர். அந்த ஒன்பது பேர்களும் நன்ருய்ப் பசிதீர உண்டார்கள். இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த யாகூபு உண்டி பற்ருமல் போய் விடுமே என்ற பதற்றத்தோடு நன்ருய் உண் ணுங்கள் என்று சொல்லுவதற்குக்கூட வாய் எழாது நின்று கொண்டிருந்தார். அப்பொழுது அந்த ஒன்பது பேர்களும் வயிருர உண்டும் இன்னும் நான்கு பேர்கள் உண்ணப்போது மான சோறு கறிகள் மீதப்பட்டிருந்தன.

இதையறிந்த யாகூபு, ஆ! இந்தப் புலவர் மிக மகத் துவமுடையவர். நாம் இவரை விருந்துண்ண அழைத்த

போது தமது மகிமையைக் காட்டத்தான் இந்த எட்டுப் பேரையும் சேர்த்து அழைத்துக்கொண்டு வந்திருக்கிருர் என்பதில் ஆச்சரியம் பூத்துப் போனவர், அன்றைய விருந் தின் நிகழ்ச்சியை அங்குள்ள முக்கியமானவர்களிடத்தி லெல்லாம் கூறிவிட்டார். இதனுல் அங்குள்ள மக்கள் பலரும் இந்தப் புலவரிடமிருந்து அற்புதங்கள் வெளிவரப் பார்க்க வேண்டுமென்று எண்ணி விட்டார்களாதலால், அன்றிருந்து அவர்கள் புலவரிடம் தொடர்பு கொண்டவர்களாய் நீங்கள் அவதானங்கள் பண்ணுவீர்களாவென்று கேட்கத் துணிந் தனர்.

திருமலைராயன் பட்டினத்திலே காளமேகப் புலவர் போய் இருந்தபோது அவரிடம் அரிகண்டம் பாடத் தெரியுமா வென்று கேட்டார்களாம் அங்கிருந்த புலவர்கள். அப்போ தவர் அரிகண்டம் என்பது புலவர்களுக்குக் குழந்தை விளை யாட்டன்ரே? எமகண்டம் பாடக்கூடிய எனக்கு அரிகண் டம் எம்மாத்திரம் என்று விடை பகர்ந்தாராம். இது போன்றே அப்துல் காதிறுப் புலவரிடம் நீங்கள் அவதானம் பண்ணுவீர்களாவென்று அவர்கள் கேட்டபொழுது நான் வயதால் நாற்பதுக்கு மேற்பட்டவன். இன்னும் எனக்குக் குழந்தைகள் விளையாட்டிலே எப்படிக் கவனம் செல்லும் என்றனராம்.

பின் எப்படியும் நீங்கள் உங்கள் கலையின் மகிமையைக் காட்டத்தான் வேண்டுமென்று அவர்கள் பற்றிப் பிடித்துக் கொண்டபோது 'தீப சித்தி' என்ற அற்புத நிகழ்ச்சி யொன் றைச் செய்து காட்டுகிறதாக வாக்குறுதியளித்தார்.

தீபசித்தி என்பது தூயதான ஓரிடத்தை அலங்காரம் செய்து அங்கு அரியணை யொன்று அமைத்து அதன் மேல் குத்துவிளக்கு நாட்டி அவ்விளக்கைப் பாடல் முகத்தால்

பொருத்தி அணைக்கிறதாகும். அரியணைமேலிருக்கும் விளக்கில் எண்ணெய் ஊற்றித் திரிபோட்டுச் சுற்றிலும் நிற்கிற மக்கள் எல்லாரும் பார்க்கிற நிலையில் புலவரைப் பாடச் சொல்வார்கள். புலவர் விளக்கை நோக்கிப் பாடியவுடன் விளக்குத் தானே பொருத்திக் கொள்ளும். பின் அந்த விளக்கை அணைக்கும்படி பாடச் சொல்வார்கள். புலவர் பாடியவுடன் விளக்குத் தானே அணைந்துவிடும்.

இப்படியோர் அற்புத நிகழ்ச்சி அன்று கண்டியிலே நடக்கப் போகிற செய்தி இலங்கை எங்கும் பரவிவிட்டதால் குறிப்பாகக் கொழும்பு, சிலாபம், மட்டக்களப்பு, யாழ்ப்பாணம் எங்குமே இருந்து மக்கள் வந்து குழுமிவிட்டார்கள். அன்று கண்டியின் காட்சியே கண் கொள்ளாக் காட்சியாய் இருந்தது. புலவர்கள், படித்தவர்கள், அதிகாரிகள், வர்த்தகர்கள் மற்றும் வகை வகையான மக்களெல்லாம் வந்து நிறைந்துவிட்டார்கள்.

குறிப்பிட்ட இடத்திற்குப் புலவரையும் அழைத்துவந்துவிட்டார்கள். பெரிய குத்துவிளக்கு ஒன்றில் நிறைய விளக்கெண்ணெயை ஊற்றி எரிவாய் தோறும்திரிகள் போட்டுச் சுற்றி நிற்போர்கள் பார்வைக்குத் தெரியுமாறு அரியணை மீது நாட்டினார்கள்.

அப்பொழுது அங்குப் புலவர் மேற்குத் திசையை நோக்கியவராய்ச் சிறிது நேரம் தியான நிலையில் வீற்றிருந்தார். பின் அவர் விளக்கு வைத்திருக்கும் அரியணையின் பக்கம் திரும்பிப் பார்த்தவுடன் அவர் வாயிலிருந்து "மெய்ஞ்ஞான நாயகா இறசூலே, மெய்ஞ்ஞான நாயகா இறசூலே" என்ற உச்சரிப்புக்கள் வெளிப்பட்டுக்கொண்டிருந்தன.

இங்ஙனமே உச்சரித்துக் கொண்டிருந்த புலவர் தாம் பாடுவதற்குரிய குறிப்புக்கள் தென்பட்டவுடன் கீழ்க்காணும் பாடலைப் பாடுவதற்கு ஆரம்பித்தார். அது,

(வெண்பா)

" எரிவாய் விரிந்தெழுந்து எண்ணெய்மேல் தோய்ந்து
கரிவாய் இருள்போக்கிக் காட்ட—அரியணையின்
தூண்டா விளக்கே சுடர்விட்டு நீயென்முன்
ஈண்டிங் கெழுந்து எரி "

என்பதாம். இந்தப் பாடலின் ஈற்றடியில் காணும் 'எரி' என்ற சொல்லைப் புலவர் உச்சரித்தவுடன் அந்தக் குத்து விளக்குத் தலைத்திரி 'கப்' என்று தானே பற்றிக் கொழுந்து விட்டு எரிந்துகொண்டிருந்தது. அந்த விளக்கில் மொத்தம் ஏழு திரிகள் ஏற்றி இருந்தன. புலவர் மேற்கண்ட பாடலைப் பாடிய பொழுது தலைத்திரி மட்டும்தான் எரிந்தது. பின் பாடல் பாடாமல் வாய்ச் சொல்லாகவே மற்றத் திரிகளை நோக்கி எரி என்று ஏவினர் புலவர். அச் சொல் வெளி வந்ததும் மற்ற எல்லாத் திரிகளும் சேர்ந்து எரிந்தன.

இங்ஙனம் விளக்கு எரிந்து கொண்டிருக்கையில் சங்கரன் பிள்ளை என்னும் யாழ்ப்பாணிகரொருவர் புலவரிடமணுகிச் சக்தி பெரியதா சிவம் பெரியதா வென்று கேட்டார். அதற்குப் புலவர், உமது கேள்வி வித்து முன்னதா செடி முன்னதா என்பதையே யொக்கும் என்றவர், பின் சக்தி எண்ணெயைப் போன்றும் சிவம் ஒளியைப் போன்றும் எனக் கூறினர்.

இன்னொருவர் தன் வலக்கையைப் பொத்திக் கொண்டு தன் கைக்குள் என்ன இருக்கிறது என்று கேட்டார். புலவர் ஒரு தங்கப்பவுன் இருக்கிறதென்று கூறினர். அப்படியே அவர் கைக்குள் ஒரு தங்கப் பவுன்தான் இருந்தது. மற்றொருவர் திருக்குறளில் 28-ஆம் பாடலை யொத்ததாகத் தொல்காப்பியத்திலிருந்து ஒரு விளக்கம் கூறுங்கள் என்று கேட்டார். உடனே புலவர்,

" நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப "

என்ற சூத்திரத்தைப் படித்துக் காட்டினார்.

இத்துடன் எரிந்துகொண்டிருக்கின்ற விளக்கை அணைத்துக் காட்டும்படி வேண்டினார்கள் சபையோர்கள். அப்பொழுது விளக்கை அணைப்பது பற்றிப் பாடினார் புலவர். அப்பாடல்,

" தூண்டா மணிவிளக்கே துகள்போக்கும் தூயொளியே
காண்டற் கரியதோர் காட்சியே—வேண்டி
எரியவுனை வைத்ததுபோல் எல்லாரும் பார்க்க
அரியணையில் நீநின் றணை "

என்பதாம். இதில் கவிஞர் விளக்கைத் தூண்டா விளக்கு என்று குறிப்பிட்டிருக்கிறது விளக்கு எரிகிறபோது யாரேனும் அதனிடம் போய்த் திரியை ஏற்றித் தூண்டவில்லை என்பதே.

கவிஞர் இந்தப் பாடலைப் பாடியதும் முதலில் தலைவிளக்கு மட்டும் அணைந்தது. பின் வாய்ச் சொல்லிலே மற்ற விளக்குகளையும் அணைத்து மகத்தான அதிசயத்தை எழுப்பிக் காட்டினார்.

முடிவில் கொழும்பிலிருந்து வந்த கமலவல்லி என்னும் மங்கை நல்லாள் ஒருவர் புலவரை அணுகித் திருக்குறளில் கூறப்படும் பெரியவைகளில் உவமை நயங்களாக மூன்று பெரியவைகளைக் கூறுங்கள் என்று கேட்டார். அதற்குப் புலவர் கீழ்க்காணுமாறு,

" காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது "

" பயன்தூக்கார் செய்த உதவி நயன்தூக்கில்
நன்மை கடலிற் பெரிது "

நிலையில் திரியா தடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது ''

என்னும் பாடல்களைப் படித்துக் காட்டினர். அப்பொழுது இம்மூன்று பாடல்களிலும் எது பெரிது என்று கேட்டார் அந்தப் பெண். உலகம் பெரிது என்று கூறினர் புலவர். எப்படி என்று கேட்டார் அவ்வணங்கு. தனித்தனியே கடல் பெரிது மலை பெரிது ஆயினும் அவை இரண்டும் உலகினுள் அடங்கி விடுகின்றமையால் உலகம் பெரிது என்று கூறினர் புலவர். இவ்வார்த்தையைக் கேட்டு மனம் மகிழ்ந்துபோன அம்மடந்தை எல்லாவற்றிலும் நீங்கள் பெரிது என்று கூறினர்.

அப்பால் அங்கு வீற்றிருந்த பொன்னம்பலக் கவிராயர் புலவரது பெருமை செப்பும் முகத்தான் கீழ்க்காணும் வெண்பாவைப் பாடினர். அது,

'' எல்லா அதிசயத்தும் ஈது மிகப்பெரிதாம்
வல்லான்மெய்ஞ் ஞானியப் துல்காதிர்—பல்லார்முன்
பாட்டால் விளக்கெரித்துப் பாட்டதனு லேயணைத்துக்
காட்டிவிட்ட இக்காட்சி காண்''

என்பதே.

வேறு புலவர்கள் பலரும் பாராட்டுக் கவிதைகளும் வாழ்த்துக் கவிதைகளும் பாடினர்கள்.

———

# 7. புலவர் காதிர் அசனர் மரக்காயர்

காலைமணி எட்டு இருக்கும். திருச்சி இரயில் நிலையத்தில் சென்னைக்குப் புறப்படுகிற வண்டி நிறுத்தப்பட்டிருந்தது. பயணிகள் முன்னும் பின்னுமாக ஏறிக் கொண்டிருந்தார்கள். படுக்கையைத் தோளிலும் பழக் கூடை தண்ணீர்ச் செம்பு இவைகளைக் கையிலும் தூக்கிக் கொண்டு வந்த இரயிலடி ஊழியன் இதுதான் 2-வது வகுப்பு வண்டி என்று தன் சுமைகளை அதனுள் திணித்து விட்டுக் கூட வந்தவரை ஏறுங்கள் என்று கூறினன். தலையில் மகுடம் தரித்திருப்பது போலத் தொப்பியும் உடலில் மேல்சட்டையும் அணிந்திருந்த அந்தக் கம்பீரமான மனிதர் தம் பீடு நடையோடு வண்டியிலேறினர்.

ஒரு நிமிடம்கூடச் சென்றிருக்காது. பரபரப்போடு அந்த இரயில் பெட்டிகள் அனைத்தையும் உற்று நோக்கியபடி ஓடி வந்த பார்ப்பனரொருவர் அவரைக் கைகூப்பி வணங்கியவராய் மரக்காயரவர்களே! ஊர் போனதும் செய்தி தெரிவியுங்கள் என்று கூறினர். மரக்காயர் விடையாக நல்லது ஐயர்வாள் என்ருர். வண்டியும் நகர்ந்து விட்டது.

மரக்காயர் ஏறி இருந்த வண்டித் தடுப்பில் 4 பேர்க்குத் தான் இடம் இருந்தது. மரக்காயருக்கு முன் 3 பேர்கள் ஏறி இருந்தனர். அங்கு மரக்காயருக்கு இடத்தில் இருந்தவர் ஒரு துரைத்தன அதிகாரி போன்று தோன்றினர். எதிரே இருந்த இருவரில் ஒருவர் நெற்றி முழுவதும் திருநீறு பூசியவராய்க் கழுத்தில் கடுக்கை மாலை அணிந்திருந்தார். தூய மஞ்சள் நிறமுள்ள மென் துயிலை அரையில் தரித்து மார்பினும் கைகளிலும் பட்டை பட்டையாகத் திருநீறு

பூசிக் கொண்டிருந்தது அவரையொரு துறவியைப் போலக் காட்டியது. அவர் பக்கத்தில் இருந்தவர் அவருடைய அன்பர் போன்று விளங்கினர்.

இரயில் வண்டி விரைந்து ஊடுருவிக் கொண்டு போகையில் இரு மருங்கிலும் மருத வேலியும் இடைக்கிடை குறிஞ்சிக் காடும் காட்சியளித்துக் கொண்டிருந்தன. அங்கு இயற்கை அன்னையின் எழிலிலே இதயத்தைக் கொடுத்துவிட்ட துறவியார் தமிழர் ஆராய்ச்சியிலே நானிலப்பண்பினை விரித்துரைக்கும் தொல்காப்பியத்தினுள் நுழைந்து விட்டாராதலால் அவர் வாயிலே "மாயோன் மேய காடுறை உலகமும்".... என்னும் அகத்திணைச் சூத்திரம் அலம்பிவிட்டது.

அங்கு அடிகளார் வாயிலே அலம்பிவிட்ட சூத்திரம் அவர் பக்கத்திலிருந்த அன்பரையும் எதிரே இருந்த அதிகாரியையும்தான் கவனத்தில் அழ்த்தியது என்பதற்கில்லை. நம் மரக்காயர் அவர்களின் முழுக் கவனத்தையும் ஈர்ப்பதாய் விட்டது. இதனுல் மரக்காயர் வேறு திசையிலே தன் செவிகளைத் திருப்பிவிடாது அடிகளார் வார்த்தையையே ஆழ்ந்து கவனிப்பவராய் இருந்தார். அடிகளாரோ அத்துடன் மேலே செல்லாதவராய் அங்கு நில விளக்கத்திற்கு மட்டும் பொருள் படுத்திவிட்டுத் தன் சிந்தையை வேறு வழியில் திருப்பினுர்.

இதை யறிந்த அன்பர், நீங்கள் தொல்காப்பியத்தில் அதிலும் அகத்திணையைப் பற்றி எடுத்து விட்டீர்கள். ஓரளவேனும் அதற்கு விளக்கங்கள் கூறுங்களேன். இரயில் பயணம் தொல்காப்பியமாக இருக்கட்டும் என்ருர். அதன் பின் அடிகளார் அகத்திணையைப் பற்றிக் கூற முன் வந்தார்.

அடிகளார் கூறிய விளக்கம் :

மனித வாழ்க்கையை அக வாழ்வு புறவாழ்வு என இரு கூருகப் பிரித்துள்ளார் தொல்காப்பியர். இவற்றைத் திணை என்னும் பகுதிப் பொருளாகச் சிறப்புக் கொடுத்திருக்கிருர் அவர். அகம் என்ருல் உள்ளம். வீடு என்று பொருள். திணை என்ருல் பகுதி. ஒழுக்கம் என்று பொருள். மனிதர்களுக்கு அகத்தில் தோன்றுகிற அன்பே காதல் ஆசை என வேறுபடுகிறது. இவ்வாறு கருத்தை உட்புகுத்தித் தாம் ஒருமைப்பாடு கொண்டுள்ள ஆண் பெண்களின் உள்ளத் தொடர்புகளை அகத்திணை என்று கூறினுர் தொல்காப்பியர். இத்தகைய அகத்திணையை ஏழு வகைத்தாய்ப் பிரித்துள்ளார் அவர். அவற்றுள் கைக்கிளைத்திணை பெருந்திணை என்பவைகளும் அடங்கும்.

"கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய்
முற்படக் கிளந்த வெழுதிணை யென்ப"

(அக–சூத்திரம்:1.)

இதில் முன்மொழியாகக் காணும் கைக்கிளை ஒரு தலைக் காமம் எனப்படும். அது தலைவி தலைவனை விரும்பாத இடத்தில் தலைவன் எவ்விதத்தும் தலைவியை அடைய முயற்சித்தல். இவ்வாறே தலைவன் தலைவியை விரும்பாத விடத்துத் தலைவி எவ்விதத்தும் தலைவனை அடைய முயற்சித்தல். இவற்றிலும் சிறப்புடைய கைக்கிளை சிறப்பில்லாத கைக்கிளை என இரு பிரிவுகளையும் விளக்குகிருர் தொல்காப்பியர் என்று விளக்கம் கூறிவந்த அடிகளார், இந்தக் கைக்கிளைக்குச் சிறப்பு விளக்கும் சூத்திரத்தை நினைவுக்குக் கொண்டு வர முயன்றவர் அச்சூத்திரம் அப்பொழுது அவர் நினைவில் எழாமல் இருந்தது பற்றிப் பொருளை நிறுத்தி விட்டுச் சூத்திரத்தை வரப்பண்ணிக் கொண்டிருந்தார்.

இப் பொருள் நயத்தை எல்லாம் முற்ற முற்றக் கேட்டுக் கொண்டிருந்த மரக்காயர் அங்கு அடிகளார் வரப்பண்

ணிக் கொண்டிருந்தது வருந்தும் நிலை பொருதவராய் நீங்கள் வரப்பண்ணுகிறது,

"காமஞ் சாலா விளமை யோள்வயின்
ஏமம் சாலா இடும்பை எய்தி
நன்மையும் தீமையும் என்றிரு திறத்தாற்
தன்னொடும் அவளொடும் தருக்கிய புணர்த்துச்
சொல்எதிர் பெருஅன் சொல்லி இன்புறல்
புல்லித் தோன்றுங் கைக்கிளைக் குறிப்பே"

(அகத்-சூத். 50.)

என்ற சூத்திரம்தானே என்று அடிகளாரை நோக்கினார்.

பின் என்ன? அங்கு அடிகளார் மட்டுமன்று. அவர் மருங்கிலிருந்த அன்பரும் எதிரே இருந்த அதிகாரியுமே மலைப்பிலே ஆழ்ந்து திகைத்து விட்டவர்களாய் மரக்காயரை ஒரு சிறு பொழுது கூர்ந்து பார்த்து விட்டுப் புன்முறுவல் பூத்தனர். மரக்காயர் தாம் எடுத்துக் கொண்ட சூத்திரத்தை ஓசைப் பண்பு கெடாமலும் பொருள் நயம் பிறழாமலும் இசைத்துக் காட்டியதிலிருந்தே இவர் சிறந்த தமிழறிஞராய் இருத்தல் வேண்டு மென்ற முடிவிற்கு வந்துவிட்ட அடிகளார், தாம் படுத்தி வந்த பொருள் விளக்கத்தை நிறுத்தி விட்டு மரக்காயரை நோக்கி நீங்கள் யார் என்று வினவத் தலைப்பட்டார்.

மரக்காயர் தாங்கள் யார் என்று எனக்கும் தெரியவில்லை. இங்கு என்னை நீங்களும் உங்களை நானும் யார் யார் என்று தெரிந்து கொள்கிறது பின்னையதாய் இருக்கட்டும். உங்கள் உரை நயம் கேட்க நானும் உவகை கொண்டுள்ளேன். ஆகவே நீங்கள் விளக்கத்தை ஆரம்பியுங்கள் என்றார். அதற்கு அடிகளார் மேலும் இஸ்லாமியர்களில் இவ்வளவு தூரம் தமிழறிவு பெற்றிருக்கிறது பாராட்டுக் குரிய

ஒன்று; அதிலும்இங்கு என் நினைவுக்கு வராமலிருந்த இந்த இலக்கணச் சூத்திரத்தை நீங்கள் குறிப்பறிந்து கூறி விட்டதை யோர்கிறபோது நீங்கள் என்னிலும் மிக்காராய் இருப்பீர்கள் என்றே தோன்றுகிறது என்ருர்.

பின் அடிகளார் மரக்காயரையே விளித்து, நீங்கள் என் நினைவிற்குக் கொணர்ந்தளித்த சூத்திரத்திற்கு நீங்களே பொருள் படுத்துங்கள். நான் உங்கள் வாய்மொழியைக் கேட்டு மனமகிழ்தற்கு இஃதொரு வாய்ப்பு என்று கூறினுர். மரக்காயர் நீங்கள் கூறுவதைப் பார்த்தால் நான் இங்கு வாய் திறந்ததற்கு அளிக்கும் தண்டனை போலல்லவா இருக்கிறது என்று மறுத்துரைக்கையில், இடையில் அன்பர் குறிக்கிட்டு அடிகளார் விரும்புகிறதையே நானும் விரும்புகிறேன். நீங்கள் விளக்கப்படுத்திய கைக்கிளை இயலுக்கு நீங்கள் பொருள் கூறுங்கள் என்று மரக்காயரை வேண்டினுர். அதற்கும் மரக்காயர் அடிகளார்க்குப் பெருமை செப்பி மறுத்துரை புகல்கிறபோது, அவர் பக்கத்திலிருந்த அதிகாரி அடிகளார்க்கு நினைவில் வராததை நீங்கள் நினைவிற்குக் கொண்டு வந்தீர்கள். ஆகவே இங்கு நினைவிற்குக் கொண்டு வந்த சூத்திரத்திற்குப் பொருள் பகர வேண்டுமென்பதுதான் என் விருப்பமாகவும் இருக்கிறதென்று மரக்காயரிடம் கூறினுர்.

இத்தகைய சூழ்நிலையில் மரக்காயர் உள்ளத்திலே பலப்பல எண்ணங்களும் துளும்பத் தலைப்பட்டன. இவர்கள் முன்னிலையில் சூத்திரத்தை அழகு பெறப் பகர்ந்த நமக்குப் பொருள் பகரும் ஆற்றல் இருக்கிறதாவென்பதை அறிவதற்குத்தான் இவர்கள் இங்ஙனம் விடாப்பிடி பண்ணுகிருர்கள் போலும் என்ற எழுச்சியிலே, நீங்கள் விரும்புகிறபடியால் நானே பொருள் பகர்கிறேன் என்று தலை நிமிர்ந்து விட்டார்.

கைக்கிளைத் திணைக்கு மரக்காயர் கூறும் விளக்கம்:

''கைக்கிளை'' என்பது ஒரு மருங்கு பற்றிய கேண்மை என்பதை அடிகளார் ஓரளவு விளக்கினார்கள். உதாரணமாகக் கைக்குடை,கைப்பொருள்,கைக்கோல், கைக் குழந்தை, கைவளை இவைகளின் தொடர்பினை ஒப்பதாகும். இத்தன்மை பற்றித்தான் இதையும் பெருமையில்லாத தலை மக்களின் கூட்டுறவோடு இணைத்துள்ளார் ஆசிரியர் தொல்காப்பியர். அது வாழைப் பழத்தில் தோல் ஒட்டிக் கொண்டிருக்கிறது போன்றதாகும்.

நான் கூறிய சூத்திரத்தில் சாலா—அமையாத. ஏமம்—மருந்து. இடும்பை—துன்பம். புல்லி—பொருந்தி என்பன அருஞ்சொற் பொருட்கள்.

காமக் குறிப்புச் சிறிதுமில்லாத ஒருத்திபால் ஒருவன் காதல் கொள்ளுதல் நகைப்புக்கிடமான செய்கை. அதனால் தான் இதனைச் சிறந்த கைக்கிளையாகப் பேசுகிறார் ஆசிரியர். இங்ஙனம் காமம் சாலாத மகள் மேற் கொள்ளும் காதலுக்கு மருந்தே இல்லை. இவ்வாறு காதல் கொள்கிற மகன் மருந்தினால் தீர முடியாத துன்பத்தை அடைவான் என்பதை அவர் வலியுறுத்துகிறார். இப்படித் துன்பத்தின் காரணமாய் மகளைக் குறை கூறுதலும் நகைப்புக் கிடமான செயலே.

தன் குறையை உணராதவன் பிறர் பொருட்டால் துன்பமடைகிறபொழுது தன்னைச் சிறிதும் தவறு இல்லாதவனாக மதிப்பது இயற்கை. இன்னும் காதல் விடாயினை உரைத்தால் அவள் யாது பதில் கூற இயலும். தன் நெஞ்சு மட்டும் அறியும்படி மெல்லென மனத்துக்குள் ஏதாவது சொல்லிக் கொண்டாலும் அதற்குப் பதில் ஒன்றும் கிடைக்காது. இதனால் அவன் உணர்ச்சி அவனுக்கே நகையை விளைவிக்கச் செய்யும். ஆகவேதான் ''சொல்லி இன்புறு

தல்'' என்பதைக் கைக்கிளைக் குறிப்பு என்று பேசுகிருர் ஆசிரியர்.

இனி நச்சினூர்க்கினியர் கருத்தைக் கவனிப்போம். இவர் ஐந்திணை ஒழுக்கம் நிகழ்வதற்கு முன் காதலன் காதலியை விழைந்து நிற்றல். அவள் அவனை இன்னுன் என்று துணிதற்குமுன் ஐயுறல். பின்னர் அவளுக்குக் குறிப்பு உணர்த்தல் என்ற நான்கும் கைக்கிளைப் பகுதிகளாகுமெனக் கூறுகிருர்.

''முன்னைய நான்கும் முன்னத்திற்கு என்ப''
(அகத்திணை-சூத்: 52.)

என்னும் சூத்திரத்திற்கு உரை கூறும்போது ''முன்னைய நான்கும்'' என்ற பகுதிக்கு அவர் இவ்வாறு கூறுகிருர்; இவைகளும் சிறப்புடைய கைக்கிளைகள் தாம் என்பது அவர் கருத்து. இவை நான்கும் தலைவியின் வேட்கைக் குறிப்பைத் தலைவன் அறிவதற்கு முன்னே காதல் நசையினுல் தலைவனுல் கூறப்படுவதால் இவையும் கைக்கிளையாயிற்று என்பது அவர் கருத்து.

இளம்பூரணர் இதற்கு வேறு உரை தருகிருர்:

அவர் ''முன்னைய நான்கும்'' என்பதற்கு ஏருமடற்றிறம், இளமை தீராத்திறம், தேறுதல் ஒழிந்த காமத்து மிகாத்திறம், மிக்க காமத்தின் மாருகாத்திறம் இவை நான்கும் பின்னையதான பெருந்திணைக் குறிப்பின் எதிர்மறை என்பதே. ஏரு மடல் திறம் என்பது தலைவன் தலைவியை வெளிப்படையாக இரத்தல். மடலேறியாவது நான் உன்னை அடைவேன் எனத் தலைவன் வலியுறுத்திஞல் அது பெருந்திணை யாகின்றமையால் மடல் ஏருது அவன் இரந்து நிற்றல்.

இளமை தீராத்திறம் என்பது தலைவன் தலைவிக்கு நலம் பாராட்டல். தேறுதல் ஒழிந்த காமத்து மிகாத் திறம் என்பது தலைவன் புணராவிரக்கம் காட்டல். மிக்க காமத்தின் மாருகாத்திறம் என்பது தலைவன் நயப்புறுத்தல்.

இத்துடன் சிறப்பில்லாத கைக்கிளைக்கு வந்து சேர்வோம். இக்காலத்திலும் முல்லை நிலத்தில் வாழும் ஆயர்கள் ஏறு தழுவிய ஆண் மகனுக்குத் தங்கள் பெண்ணை மண முடித்துக் கொள்கிறதைக் காணலாம். அது கொல்லும் திறனுடைய காளையொன்றினைத் தன் உடல் வலியாலும் உள்ள உரத்தாலும் வயப்படுத்தி விடும் ஆடவனுக்குத் தன் பெண்ணை வழங்கி விடுதலே.

இதில் ஆடவன் பெண்ணை நச்சியே ஏறு தழுவ ஒருப்படுகிருன் என்ருலும் பெண் அவனை நச்சினளா என்பதை அறிய முடியவில்லை. ஆனல் பெண் அவன் மேல் விருப்பங் கொண்டில்லையாயினும் ஆடவன் ஏறு தழுவி விடுவானேல் பெண் அவனுக்கு மனைவியென்பது வலியுறுத்தப்படுகிறது.

பின் அவளும் அவனும் உண்மையில் காதலில் விரவி ஒரு மனப்பட்டவர்களாய் இருப்பினும் அவன் ஏறு தழுவுவதில் தோல்வியுறுவானேல் அவள் அவனுக்கு மனைவியாகிறது குதிரைக் கொம்புதான். இத்தகைய திருமணங்களையே கைக்கிளையிலும் சிறப்பு இழந்த திருமணமென்று கூறுகிருர் தொல்காப்பியர்.

பழங் காலத்து அரச பரம்பரையிலே தமிழ் நாட்டினரல்லாச் சிலரிடையே வில்லை முறித்தும் வேறு பல தீரச் செயல் புரிந்தும் திருமணங்கள் நடத்தி இருப்பதெல்லாம் இவ்வாருன கைக்கிளைத் திருமணங்கள் தாம். இதில்

சூர்ப்பநகை இராமன்மீது காதல் கொண்டுள்ளதைச் சிறப்புடைய கைக்கிளை என்று கூறலாம். எனினும் இவற்றை எல்லாம் அகத்திணையிலே வைத்துப் பேசுகிருர் தொல்காப்பியர். அகத்தே நிகழும் இன்பம் பற்றி இவ்வொழுக்கம் பிறந்தமையால் அகத்திணை என்றும் கூறினர். (அகம்-இடவாகு பெயர்.)

இனி நாம் பெருந்திணையிற் சிறிது கருத்தைப் புகுத்துவோம். ஒவ்வாக் காதல் யாதோ அதையே பெருந்திணை என்று கூறுகிருர் தொல்காப்பியர். இதனுள் செவ்விய வாழ்க்கை நடாத்துதற்குப் பருவமில்லாதார் கூட்டுறவும் இணைந்து கொள்ளும். இளம் பூரணர் இதற்கு மூன்று குறிப்புக்கள் கொடுக்கிருர் அம்மூன்ருவன:

முதுமைப் பருவம் எய்திய தலைமகன் இளமைப் பருவமுடைய மகளிரை மணத்தல். இங்ஙனமே முதுமைப் பருவமுடைய தலைமகள் இளமைப் பருவமுடைய ஆடவனை மணத்தல். இங்கு ஆணோ பெண்ணோ முதுமைப் பருவம் எய்திவிட்டபின் அறத்தின் வழிநின்று தவநிலை ஏற்றலையொழித்துக் காமத்தின் வழியிலே நடந்து கொண்டிருத்தல் என்பதே.

இவற்றில் ஒவ்வாக் காமமாகிய பிரமம், பிரசாபத்யம், ஆரிடம், தெய்வம் என்ற நான்கும் பெருந்திணைகளில் தலையாயது என்று கூறுகிருர் ஆசிரியர். பிரமம் என்பது, நாற்பத்தெட்டு ஆண்டு பிரம்மசரியம் காத்து நின்றவனுக்குப் பூப்பெய்திய பன்னிரண்டு வயதுடைய பெண்ணை அணிகலன் அணிந்து தானமாக மணம் செய்து கொள்வதற்கு அளிப்பது. பிரசாபத்தியமாவது, கோத்திரத்தார் என்ற உரிமையில் பெண் வேண்டுமென்று கேட்பாராயின் பெண்ணின் தாய் தந்தையர் மறுக்காமல் மணமுடித்துக் கொடுப்பது. ஆரிடம் என்பது, பொன் கொம்பும் பொன் குளம்பும் உள்ள பசு,

காலே இவற்றைச் செய்து அவற்றினிடையே பெண்ணை நிறுத்தி நீர் வார்த்துக் கொடுப்பது. தெய்வம் என்பது வேள்விக்கு ஆசிரியராய் நிற்பார்களுள் ஒருவர்க்கு வேள்வித் தீயின் முன் கன்னிகா தானமாக ஒரு பெண்ணைக் கொடுப்பது. இவற்றில் மூன்றினையும் முறையே அறம்விலை, ஒப்பு, பொருள் கோள் என்றும் உரைகாரர்கள் கூறுவர். இனிமேல் பெருந் திணைக் குறிப்புக்களில் மடல்மா ஏறுதலை உன்னிப் பார்ப் போம்.

"ஏறிய மடல்திறம் இளமை தீர்திறம்
தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்
மிக்க காமத்து மிடலொடு தொகை இச்
செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே"

(அகத்திணை-சூத் : 54.)

தேறுதல்: தெளிதல் - மடல் ஏறிய திறம், இளமை தீர்ந்த திறம், தெளிதல் பெருததான காமத்து மிகுதிறம், மிக்க காமத்து மிடல் என்ற நான்கு தன்மைகளும் பெருந் திணைக்கு உரியவை என்பதுதாம் தொல்காப்பியர் கருத்து.

மடலேறுதல், தலைவன் தன் காதலை நிறைவேற்றுதற்குத் தலைவியை விரும்புகிறபோது தலைவி மறுத்த காலையிலும், காதல் கொண்டிருந்த தலைமக்களுள் தலைவன்மீது ஏதேனும் தவறுதல் கண்டு தலைவி தலைவனை விலக்கி நின்ற காலை யிலும் தலைவன் மடலேறி வருகிறது உண்டு. அது பனங் கருக்கு மட்டையில் செய்த குதிரை யொன்றில் தலைவன் உடம்பெங்கும் நீறு பூசியவாறு அவனால் எழுதப் பெற்ற தலைவியின் ஓவியத்தைக் கையில் பிடித்துக் கொண்டு நாற் சந்தியிலும் ஏறிவருவான். அந்நிலையில் அவனைக் காண்பவர் கள் சோதனை தரமுடியுமா வென்று கேட்பார்கள். அவன் அதற்கிசைந்து தன் குதிரையைப் பிடித்து இழுப்பான். அப் பொழுது பனங்கருக்குப் பட்ட அவன் உடம்பினின்றும்

உதிரம் வெண்ணீராக (சுக்கிலமாக) வெளிப்படுமேல் அவன் விரும்பிய பெண் எத்தகைய குல மேன்மை பெற்றவளாயினும் அவளை அவனுக்கே உரியவள் என்று மணமுடித்துக் கொடுப்பார்கள். இவ்வாறில்லாது அவன் உடம்பினின்றும் இரத்தமே தோன்றுமாகில் அவன் பல்லோராலும் அவமதிக்கப்பட்டுத் தண்டனைக்கு உட்படுவான்.

எனினும், இங்கு ஆசிரியர் தொல்காப்பியர் கூறியுள்ள கைக்கிளைத் திணையும் பெருந்திணையும் மேன்மக்களுக்குப் பொருத்தமுடைய திருமணங்களல்ல என்றுதான் இவைகளை ஐந்திணை ஒழுக்கத்தினின்றும் பிரித்துக் காட்டுகிறுர். ஆகவே இனிமேல் தொல்காப்பியர் கூறுகிற மேன்மக்கள் யார் என்று கவனிக்கப் புகுவோம்.

> ''அடியோர் பாங்கினும் வினைவலர் பாங்கினும்
> கடிவரை யிலபுறத்து என்மனுர் புலவர்''

(அகத்திணை — சூத் : 23.)

இங்கு அடியோர் என்பாரைப் பிறர்க்குக் குற்றேவல் செய்து வாழ்கிறவர் எனவும், வினைவலர் என்பாரை அன்றன்று ஏதேனும் சிறுதொழில் செய்து வாழ்கிறவர் என்றும் குறிப்புக் கொடுக்கிருர் தொல்காப்பியர். பிறர்க்குக் குற்றேவல் செய்கிறவர்கள் தாம் ஏவல் செய்யும் வகுப்பினர்க்கு அடிமைகளாகவே இருந்து வாழ்ந்துவருகின்றனர். வினைவலர் என்பவர் தமக்கு ஏதேனும் வேலை கிடைக்குமானுல் அவ்வேலையைச் செய்து அதினின்றும் கிடைக்கும் வருமானத்தினின்றும் வாழ்கிருர்கள். இவ்விருதிறத்தினரும் ஐந்திணை இயலின்படி காதல் மணத்தில் ஈடுபட்டுக் கொள்வதற்கு இயலாதென்பது கருதியே இவர்களுக்கு விதிவிலக்குப் பகர்ந்துள்ளார் தொல்காப்பியர். பின் இத்தன்மையற்றவர்களான மற்றத் திறத்தினரையே அவர்

உயர்ந்தோர் என்று கூறியுள்ளார். ஆகவே இதற்கு மேல் ஐந்திணை யொழுக்கத்திற்கு வந்து சேர்வோம்.

''புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்
ஊடல் இவற்றி னிமித்த மென்றிவை
தேருங் காலத் திணைக்குரிப் பொருளே''

(அகத்திணை—சூத் : 14.)

இச்சூத்திரம் பெரிதும் உரிவழக்குக் கூறி நிற்றலால் இங்குக் குறிஞ்சித்திணையை முதலில் வைத்துப் பேசுகிருர் ஆசிரியர். அவை புணர்தலும் பிரிதலும் இருத்தலும் இரங்கலும் ஊடலும் என்பனவே. இத்திணைகள் பெரிதும் தலைவன் தலைவி இருவரும் ஒத்த நலன், ஒத்த வயது ஏனைய நல்லொழுக்க வழிகளில் அடுப்பாரும் கொடுப்பாருமின்றி ஊழ் கூட்டுவிக்கும் திருமணமாகக் கூடும். பின் முல்லைத் திணையை முதலில் வைத்துப் பேசுவோமாளுல் முதலில் காதலர்கள் ஒருவரை யொருவர் கண்டு பழகி அவர்களுக்குள் மன ஒருமிப்புக் கொள்ளுந்தனை விளக்கமாகக்கூடும்.

பின்னையே தலைமக்கள் இன்ப நிகழ்ச்சியில் ஈடுபட்டு இணைதுணையினராய் இருத்தலைக் குறிஞ்சித்திணை எனக் கொள்ளுதல் சாலும். பின் பிரிவு காரணம் பற்றி மருதத் திணையையும் இரங்கல் தன்மை பற்றி நெய்தல் திணையையும் கூறலாளுர். இப்பிரிவினையும் சிறு பிரிவு பெரும் பிரிவு என்று இருவகைத்துக் கூறலாம். சிறு பிரிவு இயற்கையாக ஒன்றுபட்ட காதலர்கள் வைகறைப் பொழுதில் பிரிகிறதும் பொருந்தும். பின் தலைவன் பரத்தையர் முயக்கில் தலைவியைப் பிரிந்திருத்தலும் அடங்கும். ஆகவே இச்சிறு பிரிவு மருதத்திணை என அமைத்துப் பெரும் பிரிவைப் பாலைத் திணையாகக்கோடல் வேண்டும். இதுபற்றியே பிறரும் கூட,

''போக்கெல்லாம் பாலை புணர்தன றுங்குறிஞ்சி
ஆக்கஞ்சே ரூட லணிமருதம்—நோக்குங்கால்

இல்லிருத்தல் முல்லை இரங்க நறுநெய் தல்
சொல்விரிந்த நூலின் தொகை''

என்று கூறியுள்ளார்.

இங்கு இல்லிருத்தல் முல்லைத்திணை, இன்பப் போர் நிகழ்த்தல் குறிஞ்சித்திணை, ஊடல் மருதத் திணை, பிரிதல் பாலைத்திணை, இரங்கல் நெய்தல் திணை என்று அறிந்து கொள்கின்ருேம். பின் இவ்வைந்திணை வழக்குகளிலும் பெரு வழக்குகள் திகழவில்லையோ வென்று கடாவுவோரும் இருப்பர். இத்தகைய கடாவுதலுக்கு விடை இல்லை என்றே கூறிவிடலாம். ஏன் எனிலோ, தலைவன் தலைவி இருவர்க்கும் ஒரு தன்மைத்தாய் நிகழும் மன வொருமிப்பு அவனியில் மிக அரிதாகவே காணப் படுகிறது. இவர்கள் எங்கேனும் ஒரு மலர்க்காவில் சந்தித்துத் தாமாக மணந்து கொள்வது போன்ற உறவுகள் களவால் வளர்ந்து பின் கற்பாகத் திகழும் ஒழுக்கத்துத் திருமணங்களிலும் ஆதி ஊழி கழிந்த பிற்றை இரண்டாம் ஊழியில் மாறுபாடுகள் பல புகுந்து விட்டமையால் இவ் வழக்குகள் சிலவிடத்து ஒழிந்து பட்டு வேறு வழக்குத் தோன்றிற்று என்பதைத் தொல்காப்பியரே,

''பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரணம் என்ப''

(கற்பியல்—சூத்: 145.)

என்று கூறியுள்ளார். இங்குப் பொய்யாவது செய்த ஒன்றினைச் செய்திலேன் என்றல். வழுவாவது சொல்லுதலே யன்றி ஒழுக்கத்து இழுக்கி ஒழுகல். அஃது அரசரும் வணிகரும் ஏனைய வேளாளரும் இயற்கைப் புணர்ச்சி நிகழ்த்திய பின்னர்ப் பொய்யும் வழுவும் தோன்றப் பிழை படுத்தி நின்றதே. இந் நிலை தவிர்ப்பான் வேண்டியே இருடிகள்

மேலோர்கள் குறுக்கிட்டுச் சடங்கு முறைப்படி திருமணம் நடத்தினர் என்பதே. இவ்வழக்கைத் தழுவியே இக்காலத்திலும் பெரும்பான்மையான மணங்கள் பெற்ருேர்களால் நிச்சயம் செய்யப் பெற்று நடந்தேறி வருகின்றன.

இத்தகைய திருமணங்களிலும் அநேகப் பெண்கள் தாய் தந்தையரின் வலியுறுத்துக்களுக்கு உடன்பட்டுத் தங்களுக்கு ஒவ்வாத கணவர்கள் கூட நோயிலும் பாயிலும் கிடந்து வாழ்க்கையை நரகக் கிடங்காகக் கொள்ளவும் வாய்க்கிறது. இத்துடன் ஐந்திணை இயலுக்கு ஒரு சிறிய எடுத்துக்காட்டு காட்டி விட்டு இங்கு என் உரையை முடித்துக் கொள்கிறேன். அது:

(1) நம்மிடத்திலே ஒரு நல்ல கடிகாரம் இருந்ததென்று வைத்துக் கொள்வோம். அந்தக் கடிகாரத்தின் மீது நமக்கு அதிகப் பிரியம் இருந்து வந்தது.

(2) நாம் வேண்டும் பொழுதெல்லாம் மணி பார்த்துக் கொள்ள உதவியதால் அந்தக் கடிகாரம் நம் வாழ்விற்கு நல்ல உதவியளித்தது.

(3) இத்தகைய கடிகாரம் நன்ருய் இருந்தது. ஏதுகாரணமாகவோ பிணங்கிக் கொண்டது. அதாவது மணி ஒழுங்காகக் காட்டி வந்தது இடைக் கிடை ஓடாமல் நின்று விட்டதே. எனினும் அதன் மீதுள்ள பிரியத்தைப் பொருத்து அதை நேர்படுத்தி வந்தோம்.

நாம் ஒரு தடவை அயலூரிலிருக்கிற நமது நண்பர் வீட்டிற்குச் சென்றிருந்த பொழுது குளிக்க ஏற்பட்டகாலை, நாம் கடிகாரத்தைக் கழட்டிச் சட்டையில் வைத்துவிட்டுக் குளித்த நாம் சட்டையில் கடிகாரம் பத்திரமய் இருக்கிறதாவென்பதைக் கவனிக்காமல் சட்டையை அணிந்து கொண்டு நம் ஊருக்கு வந்து விட்டோம். இதில் குளிக்கப் போகிற

போது கடிகாரம் சட்டையில் இருந்தது நிச்சயம் என்பது நமக்குத் தெரியும்.

(4) ஊர் வந்த நாம் கடிகாரத்தைப் பார்க்கிற பொழுது அது சட்டைப் பையிலில்லை. எங்கே தவறியது என்பதைச் சிந்திக்கிற பொழுது குளிக்கையில் தவறியதாகவே விளங்கியதால், அதைப் பற்றி நண்பருக்குத் தெரிவித்துக் கொண்டவிடத்தில் நண்பர், இங்குத் தவறி இருந்தால் போய்விடாது. தாங்கள் குளித்தபின் அங்கு யார் வந்தார்கள் என்பதை விசாரித்துத் தேடி அனுப்பி வைக்கிறேன் என்று தெரிவித்தார். நண்பர் தெரிவித்த செய்தியில் நம்பிக்கை இருந்ததால் கடிகாரம் கிடைக்குமென்று ஆறுதலடைந்து எதிர்பார்த்திருந்தோம்.

(5) முடிவிலே கடிகாரத்தைத் தேடிப் பார்த்ததில் கிடைக்கவில்லை. தவறியது தவறியதாகவே கதை முடிந்தது.

இதில் முதலாவதாகக் காட்டிய உதாரணமே முல்லைத் திணையை யொக்கும். இரண்டாவதாகக் காட்டியது குறிஞ்சித் திணையை யொக்கும். மூன்ருவதாகக் காட்டியது மருதத் திணையாகக்கூடும். நான்காவது நிகழ்ச்சி நெய்தல் திணையை யொப்பிடும். ஐந்தாவது வருத்தப்பாடு கொள்ளல் பாலைத் திணையை நிகர்க்குமென்பதை அறிவோமாக. இப்படியோர் உதாரணத்திற்கு உட்பட்ட முறையைத்தான் தொல்காப்பியர்,

''அவற்றுள்
நடுவ ணைந்திணை நடுவண தொழியப்
படுதிரை வையம் பார்த்திய பண்பே''

(அகத்திணை—சூத்: 2.)

என்று அகத்திணை இயலிலே இரண்டாவதாகப் பேசுகிருர்

என்றதோடு தன் பேச்சை முடித்துக்கொள்வதற்கு முன் வந்தார் மரக்காயர்.

இவ்வாறு அன்று ஊர்களையும் காடுகளையும் ஆறுகளை மலைகளையும் கடந்து ஓடிக்கொண்டிருக்கிற அந்த இரயில் வண்டியில் தமிழ் வெள்ளம் தேங்கி நின்றிருந்த அணைக்கட்டு உடைப்பெடுத்து விட்டதுபோல மரக்காயர் வாயிலிருந்தும் அகப்பொருள் வெள்ளம் ஓடிக் கொண்டிருந்ததானது அங்கு அடிகளாரையும் அவரது அன்பர் மற்றவரையும் சுழித்து இழுத்துக்கொண்டு போவது போல் இருந்தது.

இதனால் புதுமை பார்க்கச் சென்றிருந்த அவர்கள் கண்களில் புதியன பல தோன்றிக் காட்சியளித்தன போல, உணர்ச்சியில் திளைத்து உவகையில் ஆழ்ந்து விட்ட காலை அடிகளார் மரக்காயரை நோக்கிக் கலைமகள் உங்களிடம் சப்பளம் போட்டிருக்கிறாள். உங்கள் உரைகள் ஆற்றொழுக்காக வந்து என் எண்ணத்தைத் தடவி உடம்பினைக் குளிரச் செய்து விட்டது. இன்று நான் பெறற்கரிய பேறு பெற்றது போலாகும். எனது நண்பர் என்னை நீங்கள் காலை வண்டியில் போனால் வெயில் உங்களை வெதுப்பிவிடும். ஆகவே இரவு வண்டியில் புறப்படுங்கள் என்று தடை பண்ணினார். அப்படியாயின் ஊர் போய்ச் சேர்வதற்குள் நாடிச் செல்கிற காரியம் தடைபடுமே என்று காலையில் புறப்பட்டது உங்களது அரியதான உரைப் பேறு பெறும் வாய்ப்பை யளித்தது என்று மனமாரப் புகழ்ந்து வாயார வாழ்த்தியவர், நீங்கள் யார் எனக்குத் தெரியப்படுத்துங்கள் என்று வினவலுற்றார். அதற்கு உத்தரமாக மரக்காயர் நீங்கள் ஒவ்வொருவரும் யார் யார் என்று முதலில் எனக்குத் தெரிவியுங்கள். அதையே நான் ஆவலுறுகிறேன் என்றார்.

அடிகளார், நான் பிறந்த ஊர் பழநி. என் பெயர் சங்கர நாயகன். நான் பல்லாண்டுகளாகச் சிதம்பரத்தி லேயே இருந்து வருகிறேன். நடராசர் திருப்பணி டிரஸ்டி களில் நானும் ஒருவன். இப்பொழுது நான் சிதம்பரத்துக் குத்தான் போகின்றேன். இவர் என் மாறுக்கர். இவர் பெயர் நமசிவாயம் என்ருர்.

பின் மதிப்பாக நாம் அதிகாரியாக இருக்கக்கூடும் என்று எண்ணியவர் உண்மையில் அதிகாரியே. அவர் என் ஊர் கும்பகோணம். உத்தியோகம் சப் மாஜிஸ்ட்ரேட், பேர் மாணிக்கம் பிள்ளை. சொந்த அலுவலாகத் திருச்சி வந்து விட்டுப் போகிறேன் என்ருர். மரக்காயர் எனக் குப் பண்டகசாலே இருக்கிறது. மரக்கலங்களுக்குச் சரக்குச் சேகரித்து அனுப்பும் வர்த்தகம் செய்கிறேன். சரக்கு அனுப்பும் திருச்சித் தொடருக்கு வந்துவிட்டுப் போகிறேன். என் ஊர் பறங்கிப் பேட்டை (மஹ்மூது பந்தர்). என் பெயர் காதிர் அசனுர் மரக்காயர் என்ருர்.

இந்தக் காதிர் அசனுர் மரக்காயர் பல இஸ்லாமிய உரை இலக்கியங்களை இயற்றியுள்ளார். தூய தமிழிலே இனிமையொழுகக் கருத்தை வடித்துத் தரும் ஆற்றல் உடையவர். இவர் அழகிய தமிழ் நடை தமிழறிஞர்களுக்குக் கருப்பஞ்சாறு போன்று இனிமையளிக்கும். இவர் கவிதை கள் புனைந்திருக்கின்ருரா வென்பதை நம்மால் அறிய முடிய வில்லை. பின் கவிதைகள் இயற்றும் ஆற்றல் இவரிடத்திருந் ததா வென்பதையும் அறிய முடியவில்லை. வாக்கு வாதம் புரிவதில் மாபெரும் வல்லவரென்றே கூறலாம். இத்தகைய மதிப்பு வாய்ந்த இஸ்லாமியர்களெல்லாம் தமிழைத் தங்கள் தாய் மொழி என்று மதித்து அதை மாசறக் கற்றுக் கலைப் பெரும் குரிசில்களாகத் திகழ்ந்தது, அவர்கள் தமிழன் னைக்கு அணி சூட்டி வைத்துள்ளதை விளக்கும் உரைகல் போன்று காணப்படுகிறது.

---

